# வண்ணத்துப் பூச்சி வழங்கும் திருமணப் பரிசு!

பட்டு ரகங்களுக்கு

**20%** சிறப்புத் தள்ளுபடி

**ஜூலை 15-'75 வரையில் வழங்கப்படும்.**

(திருமண கால விசேட சிறப்புத் தள்ளுபடி)

15-7-'75 வரை
பருத்தி வகைகளுக்கு 10% விகிதமும்
மொத்த வியாபாரிகளுக்கு 15% சதவிகித
கமிஷனும் வழங்கப்படும்:




எர்ணுகுளத்தில் 'மேகலா,, பெங்களூர் கவல்ரி ரோட்,
விஜயவாடா கவர்னர்பெட், பம்பாய் டாக்டர் டி.என். ரோடில்
உள்ள அஜந்தா மற்றும் மாதுங்கா, சியான் சர்க்கிள்,
இந்தியா அவுஸ் ஆகிய இடங்களிலுள்ள கோ-ஆப்டெக்ஸ்
விற்பனை நிலையங்களுக்கு வருகை தரவேண்டுகிறோம்.

CO 3196 TM

# இந்தக் கோடையில் வேர்க்குரு எங்கு தாக்கும்?

நெற்றி

கழுத்து

தோள்

கைகள்

முதுகு

வேர்க்குரு எங்கு தாக்கினாலும்,
அதை முறியடிக்க உபயோகியுங்கள்
ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்.
ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில்
மட்டுமே நிரூபணம் பெற்ற மருந்துக்
கலவை அடங்கியுள்ளது. அது
மூன்று வழிகளில் செயலாற்றுகிறது.

- வியர்வை உறிஞ்சுகிறது: சருமத் துவாரங்கள் அடைபடுவதைத் தடுக்கிறது.
- பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- சுகமும் குளுமையும் தந்து, உடனடி நிவாரணம் அளிக்கிறது.

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரைக்
குளித்தவுடனும், படுக்கும் முன்பும்
உடம்பின்மீது தாராளமாகத்
தூவுங்கள். உடனடியாக
வேர்க்குருவைத் தடுக்கும் மருந்து
கலந்த வேர்க்குரு பவுடர்
இது ஒன்றுதான்!




சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

**ஜான்ஸன்ஸ்*
ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே
உடல் எரிச்சலை
நிறுத்துகிறது,
அரிப்பிலிருந்து
நிவாரணமளிக்கிறது
உடனடியாக.**

* Trademark © J&J 75

Johnson & Johnson*

OBM-4317 TM

வீட்டிலே தயாரான, சுத்தமான இனிப்பு பண்டங்கள்...



# என்றாலும் நூற்றுக்கு 95 பேரைப் பீடிக்கும் நோய் பரவிட இவை வழி செய்கின்றன!

பற்சிதைவு உலகமெல்லாம் பரவிப் பெருகியுள்ள நோயாகும். இதற்கு முக்கிய காரணங்கள் என்னவென்றால், நீங்கள் அன்றாடம் உட்கொள்ளும் இனிப்பு மற்றும் மாவு பண்டங்களாகும். எனவே தான் பற்களுக்கு இடைவிடாத பாதுகாப்பு தேவைப்படுகிறது.

பினகா ஃப்ளோரைட் பற்சிதைவுக்கு எதிராக நீடித்த பாதுகாப்பளிக்கிறது

LI-BF/44/75 Tam

பற்சிதைவை 50 சதவிகிதம் வரை ஃப்ளோரைட் குறைக்கிறது என விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஆகவே தவறாமல் பினகா ஃப்ளோரைடினால், நாள்தோறும் காலையிலும் படுக்கை வேளையிலும் பல் துலக்குங்கள். இதன் தனிப்பட்ட, நீடித்து நிற்கும் ஆற்றல் பல் எனாமலைப் பலப்படுத்துகிறது. பற்களைச் சிதைக்கும் கிருமிகளின் வளர்ச்சியையும் வலிதரும் சொத்தையையும் தடுக்கிறது.




**பல்லுக்கு உறுதி,**
**பற்சிதைவுக்கு எதிரி—**

# பினகா ஃப்ளோரைட்

# கல்கி

ராக்ஷஸ வைகாசி 18
ஜூன் 1, 1975

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே! சம்பவங்களும் கற்பனையே.




அடுத்த வாரம்

## கோடைச் சிரிப்பிதழ்

கடுங் கோடையையும் தண்ணீர்ப் பஞ்சத்தையும் கூடப் பொருட்படுத்தாமல் கோடைச் சிரிப்பிதழ் பிரசுரிக்கத் தீர்மானித்ததைக் கண்டு ரோஷமடைந்து தானோ என்னவோ இன்று (மே 24உ) சென்னையில் வானம் இருண்டு தூற்றல் போடுகிறது. கேரளத்தில் இன்னும் நாலு நாட்களில் பருவமழை தொடங்கலாம் என்று நாளிதழ்கள் கூறுகின்றன. எப்படியோ பூமி குளிர்ந்தால் கோடைச் சிரிப்பிதழ் தரும் மகிழ்ச்சியை விட அதிகமாகவே ஆனந்தப்படுவோம் நாம்.

பரீட்சை முடிவுகள், அட்மிஷன் தொல்லைகள், விலைவாசி உயர்வுகள், வெய்யிலின் கடுமை, தண்ணீர்ப் பஞ்சத்தின் கொடுமை முதலியவற்றை யெல்லாம் மறந்து சிரிப்பதற்கல்ல கோடைச் சிரிப்பிதழ். அவற்றையே நகைச்சுவையுடன் அணுகிச் சமாளிக்கும் துணிவு பெறத்தான்!

அடுத்த வாரம் சந்தித்துச் சிரிப்போமா?

ஆசிரியர்.

# சேமிக்கும் மனிதனே
# சிறந்த மனிதன்!

Recurring Deposits

உங்கள் எதிர்கால நல்வாழ்வுக்கு இன்றே திட்டமிட்டு செயல்படத் துவங்குங்கள். உங்களது மகன் அல்லது மகளின் கல்விக்காகவோ அல்லது உங்களுக்கென ஒரு இல்லத்தை பெறவோ நீங்கள் சேமிக்கலாம். நீங்கள் சேமிக்கும் சிறு தொகையும் உங்கள் எதிர்காலத்தில் மகிழ்வூட்ட உதவும். மாதம் ரூ. 100/- சேமித்தால் 122 மாதங்கள் முடிந்ததும் நீங்கள் ரூ. 21203 பெறுவீர்கள்.

நீங்கள் அதிகமாகவோ அல்லது இயன்ற அளவோ சேமிக்கலாம். ஆனால் சேமிக்கத் தவறாதீர்கள்!




உங்கள் சேமிப்பு வளருமிடம்

## இந்தியன் பாங்க்

(இந்திய அரசுக்கு முழுதும் சொந்தமானது)

தலைமை அலுவலகம் :
17 வடக்கு கடற்கரைச் சாலை, சென்னை-600 001

***இந்தியாவெங்கிலும் உள்ள கிளைகள் மூலம்***
***உங்கள் நலனில் அக்கறை காட்டும் பாங்க்***

# ஊர் இரண்டுபட்டால்...

ஊர் இரண்டு பட்டால் யாருக்கோ கொண்டாட்டமாம்! வசனம் சொல்வார்கள்.

ஹிந்தி மோகினிக்கு இன்று கொண்டாட்டம் எனத் தெரிகிறது. மத்திய கல்வி அமைச்சரும் ரயில்வே அமைச்சரும் பேசுவதைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றுகிறது.

தமிழகத்தில் டாக்டர் கலைஞரும், புரட்சித் தலைவரும் மாறி மாறிச் சவால் விட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களது கட்சித் தொண்டர்களோ அடிதடியிலும் குத்து வெட்டிலும் சைக்கிள் செயின் சண்டையிலும் இறங்கித் தமிழகத்துக்கே தலைகுனிவை ஏற்படுத்தி வருகிறார்கள். தலைவர் காமராஜ், முதல்வர் கருணாநிதியைத் தாக்க, இவர் பதில் சொல்ல, அவர் எதிர்க் கணை தொடுக்க.....

தமிழக அரசியல் மட்டுமல்ல; மற்ற மாநிலங்களிலும் ஏறத்தாழ இதே நிலைதான். கட்சிகள் ஏராளம்; ஏச்சுப் பேச்சுக்கள் தாராளம்.

கல்கி

மலர் 34

இதழ் 44



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இந்தத் தருணத்தில் ஹிந்தி மோகினி சதிர்க் கச்சேரி ஆடுகிறாள். வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு மத்திய கல்வி அமைச்சர் ஹாஸன், ஹிந்தியை அரியாசனத்தில் ஏற்ற மறுபடியும் முயல்கிறார். சொல்கிறார்:

'அனைத்து இந்தியாவிலும் உயர் கல்வி ஒரே மொழியில்தான் நடக்க முடியும். அந்த மொழி ஹிந்தியே! ஆங்கிலமா ஹிந்தியா என்ற போட்டிக்கு இனி இடமில்லை. ஆங்கிலத்தின் இடத்தை இட்டு நிரப்பக்கூடிய ஒரே இந்திய மொழி ஹிந்தியே! ஹிந்திதான் விஞ்ஞானம், மருத்துவம், பொறி இயல் போன்ற எல்லா உயர் கல்வியையும் போதிக்க ஏற்ற மொழி! ஆங்கிலத்தில் போதித்தால் இந்தியக் கல்லூரி மாணவனுக்குப் புரியவில்லை!'

இந்த அபசுவரப் பாட்டுக்குப் பக்கவாத்தியம் வாசிக்கிறார் ரயில்வே மந்திரி திரிபாதி. கூறுகிறார்:

'ஹிந்தியைத் தேசிய மொழியாக்குவது என்ற முடிவை அமுல் படுத்தும் கடமை அரசுக்கு உண்டு!'

ஹிந்தி மோகினியை அடித்து விரட்டி விட்டதாக எண்ணினோம். வாங்கின உதையில் விகாரப்பட்டு அவள் ஓடி விட்டதாய்க் கருதினோம். ஹிந்தி வெறியர்கள் அவளுக்குப் பணிவிடை செய்து 'மேக்-அப்' போட்டு மீண்டும் அனுப்புகிறார்கள்.

அவளுடைய மாய வலையில் விழுந்து விட்டோமானால் அதோகதிதான். ஹிந்தியைத் தாய்மொழியாகப் பெற்றவர்கள், அதிகச் சலுகைகளும் வசதிகளும் பெற்று, ஹிந்தி தாய்மொழியாகப் பெறாத மற்ற மாநில மக்கள் இரண்டாந்தரப் பிரஜைகளாகச் சொந்த நாட்டிலேயே நடத்தப்படும் பரிதாப நிலை உருவாகும். அதே நேரத்தில் விலைமதிக்க முடியாத ஆங்கிலச் செல்வத்தையும் இழப்போம். இந்த அநீதியை எப்படியும் எதிர்த்தே தீர வேண்டும்.

ஹாஸனும் திரிபாதியும் கூறியவற்றில் உள்ள அநீதிகளை வாய் வலிக்கும்வரை எடுத்துச் சொல்லியாகி விட்டது. கை வலிக்கும்வரை எழுதியும் ஆகிவிட்டது. ஆனாலும் போதாது. கொஞ்சம் அசந்தாலும் ஹிந்தி வெறியர்களுக்கே வெற்றி கிட்டும்.

முதல்வரோ, எம்.ஜி.ஆர். அவர்களோ, அல்லது காமராஜரோ கூட திரிபாதி — ஹாஸன் கூட்டுச் சதியை ஆட்சேபித்து வாய் திறக்கவில்லை. அவர்களுக்கு இதற்கு ஏது நேரம்? ஒருவரையொருவர் சாடவே நேரம் போதவில்லையே!

ரயில்வேயிலும் கல்வித் துறையிலும் ஹிந்தியைத் திணிப்பதென்று திரிபாதி — ஹாஸன் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கின்றனர். இரண்டும் அகில இந்தியாவையும் பாதிக்கும் துறைகள். ஹிந்தித் திணிப்பு ஓசைப்படாமலும், நடக்கலாம்; பகிரங்கமாகவும் நடைபெறலாம். எச்சரிக்கை தேவை.

# "நாகரீக நங்கைகள் மிகவும் புத்திசாலிகள்"

(அவர்கள் ப்ரு வாங்குகிறார்கள்)

சுமார் நான்கு ரூபாய்க்கு 30 கப்புகளுக்கு மேல் ஸ்ட்ராங்கான காபி கிடைப்பதாக என் மருமகள் பத்மா சொன்னபோது நான் ஆச்சரியமடைந்தேன்.

## ஒவ்வொரு கப் ப்ருவுக்கும் வறுத்து அரைத்த காபியின் விலையைவிட அதிகமில்லை

தலைமுறை தலைமுறையாக நாங்கள் காபித் தூளையே உபயோகித்து வருகிறோம். இப்பொழுது இன்ஸ்டன்ட் காபிகளில் ப்ரு ஒன்றையே விரும்பி சாப்பிடுகிறோம். ஏனென்றால், ப்ருவின் ருசி, சிறந்த காபியின் ருசியேதான். ப்ரு ஸ்ட்ராங்கானது- திடமானது, சிறந்த மணம் கொண்டது. அனைத்தையும்விட என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது அதன் நயமான விலையே. அவசரத் தேவைக்கு ப்ரு ரொம்பவும் சௌகரியமானது.

தற்காலப் பெண்கள் கெட்டிக்காரர்கள். என் பத்மா அறிவாளியுங்கூட.

**ப்ரு ருசி சிறந்த காபியின் ருசி**



# என்ன சேதி?

## பெண் குலத்துக்குப் புதுப் பெருமைகள்

சர்வதேச மாதர் ஆண்டு இது. இதனால் பெண் குலத்துக்குப் புதுப் பெருமைகள் தேடித் தருவதில் பலர் முனைந்திருக்கின்றனர். எவரெஸ்ட் சிகரத்தை எட்டிப் பிடித்தார் ஜப்பானியப் பெண்மணி ஜுன்கோ டாபெய். ஐ. ஏ. எஸ். பரீட்சையில் முதலாவதாகத் தேறினார் குமாரி இரான் பதுரா. எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் தமிழகத்தில் முதலாவதாக வந்தாள் செல்வி ரீதா.

வலிமை மிக்க மூன்று பெருமைகளை மெல்லியலார் சமூகத்துக்குப் பெற்றுத் தந்த மூவரையும் வாழ்த்துகிறோம்.

## பணம் பண்ணும் வானொலி

அகில இந்திய ரேடியோவில் விவித பாரதி என்று ஒரு பிரிவு உள்ளது. இதனைப் பணம் பண்ணும் வானொலி என்று மாற்றுப் பெயரால் அழைக்கலாம். விளம்பரங்களால் அத்தனை வருமானம். பணம் பண்ணுவதையே குறிக்கோளாகக் கொண்டு தரத்தை எவ்வளவு தாழ்த்த முடியுமோ அந்த அளவுக்குச் செய்தாகி விட்டது இப்பிரிவில்.

அத்தனை வருமானம் வந்தும் போதவில்லை அரசுக்கு. விளம்பர விகிதங்களை உயர்த்தியுள்ளது. ஐந்தல்ல, பத்தல்ல, இருபது சதம் முதல் நூறு சதம் வரை உயர்த்தியுள்ளது. இந்த அளவில் ஒரேயடியாக விளம்பர விகிதத்தை உயர்த்தத் துணிவு பிறந்தது எதனால்? ஏக போக்கியம் என்ற தைரியம். தனியார் துறையில் ஏகபோக்கியம் கூடாது என்று வாய்ப் புரட்டுப் பண்ணி ஏழை பங்காளனாக வேஷம் போடும் அரசு, தானே பல துறைகளில் ஏகபோக்கியம் அனுபவிக்கிறது.

அந்தத் தைரியத்தில் நூறு சதம் வரை விளம்பர விகிதத்தை உயர்த்திப் பலம் குவிக்கும் அரசு, வானொலிப் பெட்டிகளுக்கு லைசென்ஸ் கட்டணத்தையாவது ஒழிக்க முன்வரலாமே? ஏழை நடுத்தர வர்க்கத்தினர் வாழ்த்தைப் பெறலாமே?

## மீண்டும் அணு அரக்கன்

பஸிபிக் மகா கடலில் முன்பு பிரான்ஸ் நடத்திய அணுகுண்டு சோதனைகளின் விளைவாகப் பரவிய கதிரியக்கத்தில் இத்தனை எண்ணிக்கையுள்ள குழந்தைகள் அங்கஹீனர்களாகப் பிறந்துள்ளன என்று விஞ்ஞானிகள் கணக்குப் பண்ணிக் கூறியுள்ளார்கள்.

பிரான்ஸ் மீண்டும் பஸிபிக் மா கடலில் அணுகுண்டு சோதனை நடத்தவிருக்கிறது. கப்பல் போக்குவரத்தை எச்சரித்திருக்கிறது.

பிரான்ஸைக் கண்டிக்க இந்தியாவுக்குத் துணிவில்லை. போகரான் பாலைவனத்தில் வெடித்த இந்திய அணுகுண்டு அந்தத் தைரியத்தைக் கொள்ளை கொண்டு போய்விட்டது.

ஜப்பானிய அமைச்சரை நமது தூதர் 'தான்' சந்தித்து, 'இந்திய அணுகுண்டு அமைதிப் பணிக்கே' என்றார். 'அதெல்லாம் சரிதான். ஒவ்வொரு நாடும் அமைதிப் பணிக்கே என்று கூறிக் கொண்டு அணுகுண்டுகளைத் தயாரித்துக் கொண்டு போனால், உலகின் கதி என்ன?' என்று திருப்பிக் கேட்டார் ஜப்பானிய மந்திரி. திருவேங்கடத்தானும் பதில் கூற முடியவில்லை.

இதற்கிடையில் 'சீக்கிரமே இன்னொர் அணுகுண்டு சோதனை நடக்கும்' என்கிறார் நமது அணு விஞ்ஞானி ராமண்ணா. எல்லாம் அமைதிப் பணிக்காம்.

கிருஷ்ணா நீர் என்றால் சண்டைக்கு வருகிறார்கள். காவிரி நீர் என்றால் சண்டைப் பிடிக்கிறார்கள். இந்த லட்சணத்தில் அணுச் சோதனையால் அமைதிப் பணியாம்!

இச்சூழலில், போகரான் சோதனை பற்றி நமது அணு விஞ்ஞானி ஒருவரே தமது நூலில் கூறுவது கவனத்தைக் கவர்கிறது. 'அணு குண்டுகள் அனைத்துமே கேடு விளைவிப்பவை தாம். சுத்தமான அணுகுண்டு என்று ஏதுமில்லை. யுரேனியம் குண்டை விட புளுடோனியம் குண்டு மோசம். ஹைட்ரஜன் குண்டு அதைவிட மோசம். ஒருவர் எவ்வளவுதான் ஜாக்கிரதையாக இருந்தாலும் சரி, அணு குண்டின் அழுக்கை நீக்கிவிட முடியாது!'

---

ராஜாஜி சிந்தனை

### உலகுக்கு நம் தலைமை

மனிதனுடைய உடற்கூற்றைப் பொறுத்தவரையிலே வேதங்களையும் உபநிஷத்துக்களையும் கீதையையும் செய்தோருடைய மூளைச் சிறப்பை நாமும் பெற்றுத்தான் இருக்கிறோம். இதை இழந்துவிட முடியாது. இது தேக தருமம். பண்டை முன்னோர்களுடைய திறமை நம்மிடத்திலும் பொருந்தியிருக்கிறது. அரசியல் ஆதிக்கமும் அடிமைத்தனமும் அவமானமும் எப்படித்தான் இருந்தாலும் நாம் சிறிது முயன்றால் நமது பண்பாட்டை மீண்டும் பெற்றுவிடலாம். பெற்றுவிட்டால் உலகம் முழுவதும் நம்முடைய தலைமையையே எதிர்நோக்கியிருக்கும் என்பதில் ஐயமில்லை.

மரத்தை ஏதோ ஓர் இடத்தில் நட்டுவிடுகிறோம். அந்த இடத்திலிருந்தே அது செழித்தோங்கப் பார்க்கிறது. மண்ணிலிருந்து கிடைக்கக்கூடியது அவ்வளவையும் அது எடுத்துக் கொள்கிறது. அதைப்போல நாம் தோன்றியுள்ள சமுதாயத்தின் அருந்தனத்தை நன்றாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

- பண்பாடு என்ற கட்டுரையிலிருந்து

---



திருவாரூர் தொழி லதிபர் திரு வி. எஸ். தியாகராஜ முதலியார் அவர்களின் மகன்

செல்வன்

**சோமசுந்தரத்துக்கும்,**

செல்வி

**ஜெயலக்ஷ்மிக்கும்**

சமீபத்தில் திருச்சியில் மிகச் சிறப்பாகத் திரு மணம் நடந்தேறியது. திருமணவைபவத்தைத் தொடர்ந்து திருவாரூரி லும் சென்னையிலும் நடைபெற்ற வரவேற் புக்கு ஏராளமான பிரமுகர்களும் நண்பர் களும் வந்திருந்து தம் பதிகளை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்



கோடாக் லிமிடெட் டின் சென்னை பிராந்திய பிராஞ்சு மானேஜர் திரு எஸ். ராமமூர்த்தி அவர்களின் புதல்வி சௌபாக்யவதி **லலிதா ராஜலக்ஷ்மிக்கும்,** மாயவரம் அட்வகேட் திரு A. S. வெங்கட்ட ராமஅய்யர் அவர்களின் புதல்வன் சிரஞ்சீவி **ஸ்ரீனிவாஸனுக்கும்** சமீபத்தில் சென்னையில் திருமணம் விமரிசை யாக நடந்தது.

வாழ்க மணமக்கள்



# முருகப் பெருமான்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள்

## 12

சமணர்களோடு சம்பந்தர் அறிவு ரீதியில் வாதம் செய்து ஜயித்தது அவர்களுக்குப் போதவில்லை. பாண்டிய ராஜனுக்குத் திருநீற்று மகிமையால் அவர் வெப்பு நோய் தணித்ததும் போதவில்லை. தானாகவே உடம்பு குணமாகியிருக்கும் என்று நினைத்தார்களோ, என்னவோ? மறுக்க முடியாத அற்புதத்தால் மதத்தை நிலைநாட்டப் பரீட்சை வைத்தனர். அனல் வாதம், புனல் வாதம் செய்ய வேண்டும் என்றனர். அதாவது இரு கட்சிக்காரர்களும் தங்கள் தங்கள் கொள்கைகளைச் சுவடியில் எழுதி நெருப்பில் போட வேண்டும், எந்தச் சுவடி எரியாமல் இருக்கிறதோ அதில் இருக்கிற தத்துவமே சத்தியம் என்பது அனல் வாதம். ஆற்று வெள்ளத்தில் இரு தரப்பினரும் சுவடிகளை விட வேண்டும், எது பிரவாகத்தின் கதியை எதிர்த்து, மறுதிசையில் செல்கிறதோ, அதுவே உண்மை என்பது புனல் வாதம். முதலில் அனல் வாதத்தில் சம்பந்தமூர்த்தி ஸ்வாமிகளே ஜயித்தார். அப்புறம் புனல் வாதம். ஜைனர்கள் 'விப்ர க்ஷயம்' என்று சுவடியில் எழுதி ஆற்றில் போட்டதாகச் சொல்கிறார்கள். 'விப்ர க்ஷயம்' என்றால் 'பார்ப்பான் ஒழிக' என்று அர்த்தம். வேத வேள்விகள் சமணர்களுக்கு விரோதமானதால் இப்படி எழுதி வெள்ளத்தில் போட்டதாகச் சொல்கிறார்கள்.

அது மூழ்கிப் போயிற்று. அப்புறம் ஞான சம்பந்தர் ஒரு தேவாரப் பாடலை எழுதிப் பிரவாகத்தில் போட்டார். அந்தச் சுவடியோ ஆற்று ஓட்டத்தை எதிர்த்துக் கொண்டு கன ஜோராகச் சென்றது. குலச்சிறையார் என்கிற பாண்டிய மந்திரி குதிரையில் ஏறி, கரையோடு அந்த ஏடு போகிற திசையில் வேகமாகச் சென்றார். அப்புறம் சம்பந்தர் ஒரு பதிகம் பாடி அதை நட்டாற்றில் நிற்கச் செய்தார். குலச்சிறையார் அந்த ஏட்டை ஒரே சந்தோஷத்துடன் எடுத்துக் கொண்டு கரை சேர்த்த இடம் இப்போதும் ''திருவேடகம்'' (திரு ஏடு அகம்) என்று வழங்குகிறது. இதுவே சம்பந்தரின் முடிந்த முடிவான வெற்றி. புனலை எதிர்த்துப் போன அந்த ஏட்டில் என்ன எழுதியிருந்தார் என்றால்



வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல்; வேந்தனும் ஓங்குக;
ஆழ்க தீயதெல்லாம்; அரன் நாமமே
சூழ்க, வையகமும் துயர் தீர்கவே.

உலகம் முழுதும் — சர்வ லோகமும்—துயரம் தீர்ந்து, தீயதெல்லாம் தொலைந்து, 'ஸர்வே ஜனா: ஸுகினோ பவந்து' என்று இருக்கட்டும் என்கிறார். இப்படிப் பரந்த மனசோடு சொல்லும்போது, அந்தணரும் ஆனினமும் ஏதோ இந்த வையகத்தில் சேராத மாதிரி ஏன் தனியே வாழ்த்தினார்? பட்சபாதமா? அதொன்றுமில்லை. தண்புனல் விழுந்தாலே— மழை பெய்தால்தான் — லோகத்தில் சுபிட்சம். இதற்கு வானவரைப் பிரீதி பண்ண வேண்டும். யாகத்தால்தான் அவர்களுக்குப் பிரீதி. அதிலே ஆஹுதி கொடுக்க உதவும் நெய்யையும் பாலையும் தருவது பசுக் குலம்'; ஆனினம். அக்னி வளர்க்க — தேவாரப்படி 'எரி ஓம்ப' — சாணமும் அதுதான் தருகிறது. இப்படி லோகோபகாரம் செய்ய வேண்டும் என்றே பரம நியமங்களுடன் வாழ்ந்து வேதங்களைச் சொல்லி ஆஹுதி செலுத்த வேண்டியவரே அந்தணர்கள். இம்மாதிரி வையகம் துயர் தீர உதவியாக இருப்பதால்தான் அவர்களைத் தனியாக வாழ்த்தினார். லோக க்ஷேமமாக வேத கர்மாவைச் செய்யாத அந்தணர்களுக்கு இந்தத் தனி வாழ்த்து இல்லை; அப்படிப்பட்டவர்களுக்கு நானும் வக்காலத்து வாங்க வரவில்லை.

வையகத்தில் — ஒரு ஜாதிக்கு மட்டும் இல்லை; நம் பாரத தேசத்துக்கு, ஹிந்துமத சமூகத்துக்கு மட்டும் கூட இல்லை; உலகம் முழுவதிலுமே — ஒரு கஷ்டமில்லாமல் சகலரும் ஆனந்தமாயிருக்க வேண்டுமானால், இந்த லட்சியத்துக்காகவே சிலர் யக்ஞாதிகளைச் செய்ய வேண்டும் என்று அவர்களை வாழ்த்தினார்.

அவர்களுடைய தர்மத்தை நிலைநாட்டித் தருவதே அவரது அவதார காரியமாக இருந்தது.

இனி வடக்கே ஏற்பட்ட சுப்பிரமணிய அவதாரத்தைப் பற்றிச் சொல்கிறேன்.

(தொடரும்)

---

1932-ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.

# சமயங்கள் வளர்த்த சரித்திர நகரங்கள்



**எ**ன்ன கூட்டம்! என்ன கூட்டம் !

ராஜ்கீர் பாசஞ்சரில் இரண்டாம் வகுப்பில் இடம் பிடிக்க முடியாது என்று தீர்மானித்து முதல் வகுப்புக்கு டிக்கெட் வாங்கினேன். என்னை வழியனுப்ப வந்திருந்த நண்பர் டாக்டர் குமார் பிமல் கூறினார்: ''இரண்டாம் வகுப்பிலேயே பயணம் செய்யுங்கள். பக்தியார்பூர் போன பிறகு என் சொல்லில் உள்ள பொருளைப் புரிந்து கொள்வீர்கள்!''

'இந்த மனிதருக்கு என்னிடம் என்ன விரோதம்? இரண்டாம் வகுப்பில் இடிபட வைத்து ஏன் வேடிக்கை பார்க்க விரும்புகிறார்?' என்று எண்ணி அவருக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டேன். வண்டி வந்ததும் அதில் முண்டி அடித்துக் கொண்டு ஏறும் மக்களை வேடிக்கை பார்த்துவிட்டு நான் ஜம்மென்று முதல் வகுப்பில் ஏறி உட்கார்ந்து கொண்டேன். என்னைத் தவிர ஈ காக்கை இல்லை. பக்தியார்பூர் போன பின்னரோ ஏறக்குறைய வண்டியே காலியாகிவிட்டது. இருட்டு வேளையில் பேச்சுக்குக்கூடத் துணையில்லாமல் புதிய பகுதியில் எப்படிப் பயணம் செய்வது? குமார் பிமலின் கூற்றில் உள்ள பொருளைப் புரிந்து கொண்டு இரண்டு மூன்று பேராவது இருந்த இரண்டாம் வகுப்புப் பெட்டியை நாலுகவே நாடினேன்.

ஏறக்குறைய ஒன்பதரை மணிக்கு ராஜ்கிரை அடைந்து அரசாங்கப் பயணிகள் விடுதியைத் தேடிச் சென்றால் கும்மிருட்டு. அதில் எப்படியோ மானேஜரைத் தேடிப் பிடித்து என் பசியைச் சொன்னேன். நான் வெஜிடேரியன் என்று ஹிந்தியில் புரியும்படியாகச் சொல்லியும் அவர் என்னை நான்வெஜிடேரியன் ஹோட்டலுக்குத்தான் அனுப்பி வைத்தார். அங்கு கிடைத்த ரொட்டியையும் பருப்பையும் தின்ன முடியாமல் தின்று பசியைக் கொன்றேன். இரவுப் பொழுதைப் படுக்கையில் புரண்டே கழித்த என்னை விடியற் காலையில் பயணிகள் பங்களா மானேஜர் ஸ்ரீ எக்கா வந்து எழுப்பி, ''வெந்நீர் ஊற்றுக்குக் குளிக்க வருகிறீர்களா?'' என்று கேட்டார். அசதி போக வெந்நீரிலேயே குளித்து வருவோம் என்று அவருடன் புறப்பட்ட எனக்கு ராஜ்கிரில் ஏழு வெந்நீர்



- [illegible]
- [illegible]
- [illegible]



ஊற்றுக்கள் இருக்கும் விவரம் தெரிய வந்தது. இயற்கையின் இன்கருணையைப் பாருங்கள், குளிர் காலத்தில்தான் வெந்நீர் சீசனும். நான் போன பொழுது கோடை காலமானதால், மாதிரிக்கு ஒரே ஒரு ஊற்று மட்டும் சுரந்து கொண்டிருந்தது. அதனை ஒட்டியிருந்த சிறு குளத்தில் வெந்நீரை ஒரு சிராகத் தேக்கியிருந்தார்கள். மகாமகத்தின் பொழுது, மகாமகக் குளத்தில் நீரைத் தேக்குவது போல. பிரும்ம குண்டம் என்று அதற்குப் பெயர். அதில் இறங்கிக் குளிக்க நினைத்துப் படியொன்றில் காலை வைத்தவன், கழுத்தளவு வெந்நீரில் விக்கித்து நின்றேன். இப்பொழுதே பிரும்ம லோகம் சித்தித்து விட்டதோ என்று தோன்றியது. எதையும் தெய்விகக் கண் கொண்டு பார்க்கும் நாடல்லவா நமது பாரதநாடு? பக்கத்தில் கரையிலே வெற்றிலைக் காவி பற்களில் படிய நின்று முறுவலித்துக் கொண்டிருந்த பண்டா ஒருவர் மந்திரம் சொல்ல ஓடோடி வந்தார். அவர் மந்திரத்தை என் மந்திரத்தால் கட்டிப் போட்டு அவரிடமிருந்து தெரிந்து கொண்ட விவரம்:

''ஆண்டுதோறும் பல லட்சம் மக்கள் 'குளிர் காலத்தில் அருவி வெந்நீரில் நீராடக் கூடுகிறார்களாம். இவை கந்தக ஊற்றுக்கள் என்று தப்பாகக் கணக்குப் போடுகிறார்கள் சிலர். உண்மையில் இவை தாதுப் பொருள்கள் கலந்த நீரைப் பெருக்குகின்றன. இவற்றில் நீராடுவதனால் உடல் நலம் கூடுகிறது. இருபத்தேழு மாதங்களுக்கு ஒரு முறை இவ்வூரில் நடைபெறும் திருவிழா — மேலாவுக்குக் கூடும் கூட்டத்தைச் சொல்லி மாளாது. மக்கள் தங்குவதற்கு வசதி பற்றாது. வானத்தைக் கூரையாகவும், பூமியைப் படுக்கையாகவும் கொண்ட மக்களைக் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை காணலாம். சொந்த வீட்டுக்காரர்கள் பலர் சீசனில் நல்ல பணம் பண்ணுகிறார்கள்.''

''அதில் நீங்களும் ஒருவர் தானே ?''

கூழைச் சிரிப்பில் ஒரு மழுப்பல்தான் கிடைத்த பதில்.

ஏழு ஊற்றுக்களையும் சுற்றிப் பார்த்துக் கொண்டு வேணுவனத்தினுள் புகுந்தோம். மகத மன்னன் பிம்பசாரன் பகவான் புத்தர் தங்குவதற்கு ஏற்பாடு செய்துள்ள இந்த விஹாரத்தில் கரந்த ஸரோவர் என்று ஒரு குளமும் இருக்கிறது. இதில்தான் புத்தபிரான் நீராடி வந்தாராம்.



○ நாலந்தாவின் பிரதான விஹாரம். ○ ராஜ்கிரின் ஒரு தோற்றம்.



அருகே உள்ள மலைச் சிகரத்தில் ஒரு சிவன்கோயில் இருக்கிறது. அதில் இருந்த சிவலிங்கத்திலிருந்து எப்பொழுதும் நீர் வடிந்து கொண்டிருந்ததாம், தலையில் தாங்கிய பாகீரதியைச் சிவபெருமான் இங்கிருந்து தான் புவிக்கு வடிக்கிறாரோ என்று எண்ணும்படி! அந்த லிங்கத்தை யாரோ 'அலாக்'காக எடுத்துச் சென்று விட்டிருக்கிறார்கள் ! அவர்கள் ஊரில் எப்படிப்பட்ட தண்ணீர்ப் பஞ்சமோ, யார் கண்டது ?

ராஜ்கிர் என்று அழைக்கப்படும் ராஜகிருகம் இதிகாச, புராண, வரலாற்றுச் சிறப்புடைய நகரம். பாடலிபுத்திரம் உருவாவதற்கு முன்பே மகத சாம்ராஜ்யத்தின் தலைநகரமாக விளங்கும் பேற்றினைப் பெற்றது. இந்த நகரம் ஓர் ஏழுமலையான் நகரம். ஏழு மலைகளையும், அவற்றுக்கிடையே பள்ளத்தாக்குகளையும் தன்னுள் அடக்கியது.

மகதப் பேரரசர்களான பிம்பசாரனும் அஜாதசத்துருவும் கோலோச்சிய இப் பெருநகரம் இன்று வில்லேஜ் டவுன் என்று கூறும் அளவுக்குச் சிறு நகரமாகக் காட்சி தருகிறது. இதன் பண்டையப் பெருமைகளின் இடிபாடுகளைப் பார்த்து வரப் புறப்பட்டோமானால், எத்தனை பெரிய நகரமாக இருந்திருக்க வேண்டும் என்று கற்பனைக் கண் கொண்டும் காணமுடிகிறது. விளக்கம் கூறி உதவ பின்னோடு வந்தவர், இங்கு பணியாற்றும் சுற்றுலாத் துறை அதிகாரி ஸ்ரீ சாரதாப் பிரசாத்.

முதலில் நாங்கள் காணச் சென்றது பிப்பலக் குகை என்று ஒரு குகை. இது ஒரு கல்லில் இயற்கையாகவே உருவானது. இங்குதான் ஜராசந்தன் அமர்ந்திருப்

• ரா. வீழிநாதன் •

பாளும். இதில் இருந்த வண்ணம் நகரையே கண்காணிக்க முடிந்ததாகக் கூறுவர்.

அடுத்தபடியாக ஸப்த பர்ணி குகை. புத்தர் மகா பரிநிர்வாணம் எய்திய பின் பௌத்த சங்கம் இங்கு கூடிச் செயற்பட்டதாம்.

ஸ்வர்ணபண்டார் குகை, தங்கக் களஞ்சியமாக இருந்ததோ, என்னவோ? 'ஸோன் பண்டார்' என்று அழைக்கப்படுகிறது. திருச்சிராப்பள்ளி மலைக்கோயிலில் செதுக்கப்பட்டுள்ள பாறைக் குகையைப் போன்றது. ஆனால் அதைக் காட்டிலும் சற்றுப் பெரிது.

இங்கிருந்து ஒரு மைல் மேற்கே போனால் ரணபூமி என்று அழைக்கப்படும் போர்க்களம். ஜராசந்தனுக்கும் பீமனுக்கும் இருபத்தெட்டு நாட்கள் இங்குதான் போர் நடந்ததாம். அதனால் இது **ஜராசந்த் கா அகாடா** என்றும் வழங்குகிறது.

பிரதான சாலையில் முக்கால் மைல் வந்தால் பிம்பசாரன் சிறையிருந்த இடத்தைக் காணலாம். மகன் அஜாதசத்துருவே தந்தையைச் சிறை வைத்தான் என்றாலும் குடியாட்சிக்குக் கொடி காட்டியவன் என்னும் பெருமையைத் தாங்கி நிற்கிறான்.

கழுகு முனை என்று போற்றப்படும் கிருத்த கூட மலைச் சிகரம் புத்த பெருமானின் சிகரமான உபதேசங்களை வழங்கிய பெருமை உடையது. இதை அடுத்தாற்போல் ஜீவகனின் மாந்தோப்பு. ஜீவகன் பிம்பசார மன்னனின் அரசாங்க வைத்தியனாகத் திகழ்ந்தவன். இந்த மாந்தோப்பு பின்னர் புத்த பெருமானுக்கு வழங்கப் பெற்றது. ஆம்ரபாலியின் கதையையும் உள்ளடக்கிய பெருமை இந்த **ஆம்ர வனம்** என்னும் மாந்தோப்புக்கு உண்டு.

பழம்பெரும் ராஜகிருக நகரம் எத்தனை பெரிய கோட்டை மதில்களைக் கொண்டதாக இருந்திருக்க வேண்டும் என்பதை இதன் இடிபாடுகளே வலியுறுத்துகின்றன. இருபத்தைந்து முதல் முப்பது மைல்கள் வரை இம் மதில்கள் நகரைச் சுற்றி ஓடியிருக்கின்றன. பாறைக் கற்களை அப்படி அப்படியே பொருத்தி அசைக்க முடியாத உறுதிமிகு மதில் சுவர்களாக எழுப்பி யிருக்கிறார்கள்.

பாறைச் சுவர்களாலான ஒரு வெற்று வெளியில் நுழைந்தால், கீழே பாறைத் தளத்திலே சீராகப் பதிந்த ஆழமான தேர்ச் சுவடுகளைக் காண்கிறோம். எறும்பு ஊறவே கல் குழியும் என்னும்பொழுது, தேர்கள் ஊர்ந்து குழிவை ஏற்படுத்தியிருப்பதில் ஆச்சரியம் என்ன? ஆழப் பதிந்த தேர்ச் சுவடு மகத சாம்ராஜ்யத்தின் தேர்ப் படைக்குக் கட்டியம் கூறி நிற்கிறது. இங்கு ஆங்காங்கு சங்கு எழுத்துக்களில் ஏதோ பொறிக்கப்பட்டிருக்கின்றன. தேர்ப் படைக்குச் சங்கேத மொழியில் என்ன கூறியிருந்திருப்பார்கள் என்பது இன்று நமக்கு விளங்காப் புதிர்.

ஜப்பானைச் சேர்ந்த புத்த சங்கம் இங்குள்ள ரத்னகிரிக் குன்றின் உச்சியில் விசுவ சாந்தி ஸ்தூபம் என்றதொரு வெள்ளைக் கட்டடத்தைக் கட்டியுள்ளது. உலகம் அமைதியை நாட வேண்டும் என்றால் எத்தனை பாடுபட வேண்டும் என்பதை இந்த ஸ்தூபத்தைத் தரிசிக்க நடந்து செல்பவர்கள் உணர்வார்கள். ஆனால் நடந்து சென்று காணும் பொறுமை இன்று மக்களுக்கு ஏது? எனவே, மின்சாரத்தில் இயங்கும் வானவெளிக் கயிற்றுப் பாதையைச் சமைத்திருக்கிறார்கள். 120 நாற்காலிகளைத் தாங்கிய வண்ணம் இந்தக் கயிற்றுப் பாதை மேலும் கீழும் சுற்றி வந்த வண்ணம் இருக்கிறது. ஓடும் நாற்காலியில் கிருத்தகூடத்தின் அடிவாரத்தில் உட்கார்ந்தால் ரத்னகிரியின் உச்சிக்குப் போய்ச் சேரலாம். வான வீதியிலே கயிற்றுப் பாதையில் செல்லும் பொழுது குனிந்து பார்த்தால் கண்களை இருட்டிக் கொண்டு வரும். ஆண்டவனை வேண்டிக்கொள்ளத் தோன்றும். மேலே போன பின், 'அப்பாடா!' என்று அமைதிப் பெருமூச்சு விடுவோம்; அமைதியின் மதிப்பையும் புரிந்து கொள்வோம்.

இயற்கை எழில் நிறைந்த ராஜ்கிரின் பசுமையைக் கண்ணுற்று மகிழ்ந்த நான் மறுநாள் காலை நாலந்தாவுக்குச் சென்றேன். மனிதனது செயல் திறன் மூக்கில் விரல் வைக்கக்கூடியதாக உள்ளது. இவ்வளவுக்கும் நான் பார்த்ததோ பண்டைய நாலந்தாவின் இடிபாடுகளை மட்டும்தான். அவையே முழுமையோடு இருந்தால்...? பாரதத்தின் அரும் பெரும் கலைக்கு இக் குவலயமே அடிபணியும்!

ராஜ்கிரிலிருந்து எட்டுக் கல் தொலைவில் உள்ளது நாலந்தா. இங்கு இயங்கிய பல்கலைக் கழகம் ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டுவரையில் மங்காப் புகழுடன் துலங்கியது. இந்த நாலந்தா மண்ணுக்குப் புகழ் வாய்ந்த பௌத்த ஞானி சாரி புத்ரரைப் பெற்றெடுத்த பெருமையும் உண்டு. நாலந்தா பல்கலைக் கழகத்துக்கோ சீன யாத்திரி ஹுவேன் சாங்கைப் பன்னிரண்டு ஆண்டுகள் தனது மாணவராகவும் ஆசிரியராகவும் பெற்ற பெருமை உண்டு. உலகின் பல பாகங்களிலிருந்தும் வந்து இங்கேயே தங்கிப் பயின்ற பத்தாயிரம் மாணவர்களுக்கு வேண்டிய அத்தனை வசதிகளையும் செய்து கொடுத்த நாலந்தா பல்கலைக் கழகம் ஐந்து மாணவர்களுக்கு ஓர் ஆசிரியரைக் கொண்டதாகப் பணியாற்றி யிருக்கிறது என்றால் அந்தக் கல்வி வியாபாரமாகவா இருந்திருக்கும்? அறிவுத் துறையின் அத்தனை கிளைகளும் இங்குபோதிக்கப்பட்டிருக்கின்றன. இப்பல்கலைக் கழகத்தின் தலைவராகத் திகழ்ந்தவர் யோக சாஸ்திரத்தில் நிபுணரான சீலபத்ரர் ஆவார்.

ஒன்பதடுக்கு மாளிகையிலே இதன் நூல் நிலையம் இயங்கி யிருக்கிறது என்றால் எத்தனை அரும் பெரும் நூல்கள் இங்கு இருந்திருக்குமோ, யார் கண்டது?

இன்றைய இடிபாட்டு நிலையிலும் விஹாரங்கள், சைத்யங்கள், ஸ்தூபங்கள், கலையழகு கொஞ்சும் கல் படிமங்கள் ஆகியவற்றை மாதிரிக்குக் காணலாம்.

ஆசிரியர் — மாணவர் தங்கும் விடுதிகளும் தான் எத்தனை பெரியவை! ஒருவர் தங்கும் அறை; இருவர் தங்கும் அறை என்று! எண்ணி மாளாது இவற்றின் எண்ணிக்கையை! இவ்வறைகளில் புத்தகங்கள் வைப்பதற்குப் பிறைகள் முதற்கொண்டு கனகச்சிதம்! அறைகளுக்கு வெளியே அந்த நாட்களில் சலவைக் கல் போன்றதொரு கற்களைப் பதித்

## ஸ்ரீ சித்தி வினாயகர் கும்பாபிஷேகம்



சென்னை அண்ணா நகரில், சாந்தி காலனி சமீபத்தில் கோயில் கொண்டிருக்கும் வினாயகப் பெருமான் வினை தீர்த்து வருபவர். இவருக்கு ஜூன் மாதம் 25ம் தேதி புதன்கிழமை மஹா கும்பாபிஷேகம் நடைபெற விருக்கிறது. இதற்குப் பொருளுதவி புரிய விரும்பும் ஆஸ்திக அன்பர்கள் பணமோ, செக்கோ, பொருளோ கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பலாம். ஏ. விசுவநாதன், பொருளாளர், சித்தி வினாயகர் பக்த சபா, பிளாட் நெ. 4890, அண்ணா நகர், சென்னை-40.

---

திருக்கிறார்கள். அவை கதிரவனின் கதிரை வாங்கி அறையை ஒளி மயமாக்கியிருக்கின்றன. நிலவு நாட்களில் நிலவுகூடச் சந்திரகாந்தக் கல்லென இரவு வேளைகளில் இந்தப் பணியை மேற்கொண்டிருந்திருக்கிறது. மாதிரிக்கு இன்று ஒரே ஒரு கல் மட்டும் காணக் கிடைக்கிறது.

அதே போலத் தாதுப் பொருள்களை உருக்கும் கோட்டை அடுப்புக்களின் அமைப்பும், கிணறுகள் இருந்திருப்பதற்குத் தடையங்களும் கிடைக்கின்றன. இப்பெரும் கட்டடம் இரண்டு முறைகள் புதுப்பிக்கப் பட்டிருக்க வேண்டும்; பல முறைகள் திருப்பணி பெற்றிருக்க வேண்டும் என்பது கூறாமலே விளங்குகிறது.

நூலகம் இருந்த இடத்தில் அந்தக் காலத்துச் சுவரின் செங்கற்களெல்லாம் உருகித் தீயில் வெந்து மாய்ந்திருக்கின்றன. காரணம் பக்தியார் சிங் கில்ஜி என்பவனுக்கு இது கல்விக் கூடமாகத் தோன்றவில்லை. அந்தப் பெயரில் ஆயுத சாலையாகத் தோன்றியிருக்கிறது. எங்கே இவர்கள் தன் தலைக்குப் பாக்கு வைத்து விடுவார்களோ என்ற ஐயத்தில் நிராயுதபாணிகளின் மீது படையெடுத்திருக்கிறான்; பல்கலைக் கழக நூலகத்துக்குத் தீயும் வைத்திருக்கிறான். கற்கள் உருகி உருகி அழுதிருக்கின்றன. எத்தனை நூல்களை அக்கினி தேவன் சுவைத்துப் பசியாறினானோ? தெற்கே கடலரசன் என்றால் வடக்கே தீயரசன்! இருவருமே நல்ல இலக்கிய ரசிகர்கள்!

இருந்தாலும் பௌத்த தத்துவத்தையும் பாலி இலக்கியத்தையும் பயில்விக்க இன்று இங்கே ஓர் ஆராய்ச்சி நிலையம் செயற்பட்டு வருகிறது. பழம் பெருமையைப் பறைசாற்றத் தொல்பொருள் காட்சி சாலை ஒன்று முயன்று வருகிறது.

மூன்றாம் நாள் காலை ராஜ்கிரிலிருந்து கயாவுக்குப் பஸ் பிடித்தேன். நான் போனபோது ஜயப்பிரகாஷ் நாராயணனின் இயக்கம் வலுப்பெற்றிருந்த காலம். மான்பூர் என்ற இடத்துக்குப் போனதும், 'கயாவில் கல்லடியாம்' என்று கூறிப் பஸ்ஸை எடுக்க மறுத்துவிட்டார்கள் பஸ் டிரைவரும் கண்டக்டரும். 'தமிழ் நாட்டவருக்கு எவ்வகையிலும் சளைத்தவர்கள் அல்ல' என்பதை நிரூபிக்கிறாற் போல! அது மட்டுமா? சாதுப் பயணிகளைக் கண்டு பயந்து ஒரு கட்டடத்துக்குள் புகுந்தும் கொண்டார்கள். என்ன கெஞ்சியும் கொஞ்சியும் அவர்களை வெளியேற்ற முடியவில்லை.

எனக்கோ ஊர் புதிது. கையிலோ சுமை அதிகம். எங்கே எப்படித் தூக்கிக்கொண்டு போவது? இன்னும் கயை எத்தனை தூரமோ? இப்படி நான் கலங்கி நிற்கும் நேரத்தில் ஒரு கயைக்காரர் என்னிடம் வந்தார். ''கவலைப் படாதீர்கள். ஆற்றைக் கடந்தால் 'கயா' தான். ஒரு ரிக்ஷா பேசி நாம் இருவரும் போய்விடுவோம்'' என்றார். எனக்குப் போன உயிர் திரும்பி வந்தாற் போலிருந்தது.

அவர் உதவியோடு ஒரு ரிக்ஷா பேசிக்கொண்டு நான் கயைக்கு வந்தேன். அவர் ஓரிடத்தில் இறங்கிக் கொண்டு தாம் கொடுக்க வேண்டிய வாடகையைக் கொடுத்தார். என்னிடம் நீங்கள் இத்தனை கொடுங்கள் என்று கூறி ரிக்ஷாக்காரனிடமும் அதனை வாங்கிக் கொள் என்று சொன்னார். கயை ரயில்வே நிலையத்தில் 'இத்தனை கொடுத்தால்தான் ஆயிற்று' என்று முரண்டு பிடிக்கத் தொடங்கி விட்டான் ரிக்ஷாக்காரன். வீட்டுக்கு வீடு வாசற்படி என்று சும்மாவா சொன்னார்கள்!

கயாவில் உள்ள சுற்றுலாத் துறை அதிகாரி ஸ்ரீ டி. என். லாலும், அவரது உதவியாளர் ஸ்ரீ கோபால் லால் மாதுரும் மத்தியஸ்தத்துக்கு வந்தார்கள். கயாவுக்குக் கெட்ட பெயர் வாங்கித் தரவேண்டாம் என்று அவர்கள் கோரியதில் ரிக்ஷாக்காரனின் பிடிவாதம் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது.

ஸ்ரீ டி. என். லால் அவர்கள், ரிக்ஷாவில் போத் கயாவுக்குப் போகும் பொழுது சுட்டிக் காட்டிக் கொண்டே கூறினார்:

''இதோ வருகிறது பாருங்கள். இதுதான் நிரஞ்சனா நதி. இதற்கு லீலா ஜான் என்றும் ஒரு பெயர் உண்டு. அதோ வருகிறது பாருங்கள், அது மஹானே. இரண்டும் இணைந்து 'பல்கு' ஆகின்றன. கயையிலிருந்து எட்டு மைலில் போத் கயா இருக்கிறது. இங்குள்ள மஹாபோதி கோயில் மிகப் பழமையானது. இதன் கலைச் சிறப்பைக் கண்டு பர்மா, நேப்பாள் போன்ற நாடுகளும் கோயில்கள் எழுப்பியுள்ளன. இதன் அடித்தளம் நாற்பத்தெட்டுச் சதுர அடியில் தொடங்கி, உயரே குவிந்து சென்று மேலே கலசம் பொருத்தப்பட்டுள்ளது. கோயில் கோபுரத்தின் அமைப்பு வட்ட வடிவமாகும். உயரம் 178 அடி ஆகும்.

''கோயிலைச் சுற்றி அரச மரங்கள் பயிராக்கப்பட்டுள்ளன. நாற்புறத்துப் பிராகாரங்கள், தோரண வாயில்கள், உள்புறத்துத் தூண்கள் ஆகியவை அரசகுமாரர் சித்தார்த்தர் மெய்யறிவு பெற்றுப் புத்தர் ஆன விவரத்தைக் கதை கதையாகக் கூறும்.''

அவர் கூறியபடி, புத்தருக்கு மெய்யறிவு நல்கிய அரச மரத்தடியில் இப்பொழுது புதிய அரச மரம் நிற்கிறது. பழைய மரத்தின் வேரிலிருந்து இது கிளைத்திருப்பதாகக் கூறுகிறார்கள். அதன் அடியில் உறுதியான உள்ளத்தோடு வஜ்ராசனமிட்டு அமர்ந்து புத்த பெருமான் தவம் இயற்றியிருக்கிறார். அந்த வஜ்ராசனம் — அல்லது வைர ஆசனம்



## செல்வி சுநீதா

இவ்விதழ் மேலட்டையில் ஜொலிக்கும் செல்வி சுநீதாவின் நடன நிகழ்ச்சியில், பாவபூர்வமான அபிநயத்தையும், லயசுத்த மான அடவுகளையும், அழகு பாணிப் பிடிகளையும் பரவலாகக் காண முடிந்தது. நாட்டையில் அலாரிப்பும், ராகமாலிகையில் ஜதிஸ்வரமும், விறுவிறுப்பாயமைந்து ஹஸ்த முத்திரைகளின் அழகையும், பாதங்களின் ஒழுங்கு தவறுத தாள கதியையும் வெளிப்படுத்தின.

செல்வி சுநீதா, பம்பாய், ஃபைசர் கம்பெனியின் நிர்வாக டைரக்டரான திரு எஸ். வி. பிள்ளை அவர்களின் குமாரத்தி; பம்பாய், ராஜராஜேசுவரி பரத நாட்டிய கலாமந்திரின் மாணவி. இவரது பரதநாட்டிய நிகழ்ச்சி அண்மையில் சென்னை பிரும்மகான சபாவின் ஆதரவில் நடந்தது.

முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகளின் பெருமையை, பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட எடுத்தியம்பும் ''ஆறு படை வீடு'' என்ற பதம் ராகமாலிகையில் வெளிப்பட்டு, செல்வி சுநீதாவின் அபூர்வ மெய்ப்பாடுகளுடன் வானவில்லின் வர்ண ஜாலங்களையும் அள்ளிக் கொண்டு நல் வடிவமாக இலங்கியது.

குரு கே. கல்யாண சுந்தரம் நட்டுவாங்கம் செய்ததுடன் பதங்களும் கணீரென்று பாடினர். அவருடன் பாடிய ஸ்ரீமதி இந்து பாலா கணபதி நடன நிகழ்ச்சிக்கு இசை மணமூட்டினர்.

— காந்தன்

---

என்பது அந்த மரத்தடி பீடமாகும். கண்ணிமைக்காமல் கருத்தை ஒருமித்த இடம் அநிமேஷ லோசன ஸ்தூபம் என்ற பெயரில் கோயில் வடபுறத்தில் இருக்கிறது. கீழே சதுரமாகத் தொடங்கி மேலே வட்டமாகி 55 அடி உயரத்தில் நிற்கிறது. சங்கர மணம் என்னும் மேடையில் மெய்யறிவு பெற இரவு—பகல் நடை பயின்றார் புத்தர். ரத்னகர் சைத்யம் கூரை யில்லாத மேடை. ஏழு நாட்கள் இங்கு தவம் இயற்றிய பின் அவர் உடலிலிருந்து பல ஒளிகள் பாய்ந்தனவாம்.

கோயிலுக்குள் மேற்குச் சுவரை ஒட்டி புத்தரின் பெரிய உருவச் சிலை சாந்தி பொழிய அமர்ந்திருப்பதைக் காணும்பொழுது நம்மை அறியாமல் நாமும் சாந்தி உலகில் உலாவுவோம்.

குறிப்பாகத் தாமரைக் குளத்தையும் முசலிந்த ஏரி, புத்தர் பாதம் ஆகியவற்றையும் பார்த்துக் கொண்டு இந்தப் புனித மண்ணில் மேலும் சிறிது நடை பயிலுவோமானல் இப் பெத்தியர்களும், பர்மியர்களும், தாயிகளும் தங்கள் தங்கள் நாட்டுக் கலை வண்ணத்தைக் கொட்டிப் புத்தர் புகழ் பாடியிருப்பதைக் கண்டு மகிழ்வோம். இப்படிப் பார்க்கும்போது போத் கயா அனைத்துலகக் கேந்திரமாகக் காட்சி தருகிறது.

கயை ஹிந்துக்களுக்குப் புனிதமான க்ஷேத்திரம். அறச் சடங்குகளும் இந்தியாவை இணைத்த அந்தக் காலத்தை இன்றும் நினைவுக்குக் கொண்டு வருபவை அக்ஷய வடம் என்னும் ஆலமரம்; விஷ்ணு பதம் என்னும் கோயில். பதினெட்டாம் நூற்றாண்டிலே இந்தூர் மகாராணி அஹல்யா பாயி கட்டிய கோயிலாகும்இது. கயா சிராத்தம்செய்து என்னும் நீரும் கொடுத்தால் முன்னோர்கள் ஏழேழு பிறவிக்கும் கடைத்தேறி விடுகிறார்கள் என்று ஐதிகம். கயா கசியபர்கள் என்று அழைக்கப்படும் கயைவாழ் அந்தணர்களை வரித்து இங்கு சடங்கை நடத்துகிறார்கள். இவர்கள் அக்ஷய வடம் என்னும் ஆலமரத்தடியில் 'திருப்தி' கூறும்பொழுது பணத்தை எக்கச் சக்கமாகக் கறந்துவிடுவார்கள் என்று கூறுவர். இது பற்றிப் பண்டித மதன் மோகன் மாளவியாவைப் பிணைத்து ஒரு கதை கூடக் கூறுவதுண்டு

பிகானேர் மன்னரிடம் காசி பல்கலைக் கழகத்துக்காக மாளவியா நன்கொடை வசூலிக்கச் சென்றாராம். மாளவியா கேட்ட தொகையை மன்னர் தர மறுக்கவே, 'வசூலிக்கிறபடி உங்களிடம் வசூலித்துக் கொள்கிறேன்' என்று கூறி மாளவியா திரும்பி விட்டாராம்.

காசி யாத்திரை புறப்பட மன்னர் கயையில் சிராத்தம் செய்ய வந்தபொழுது மாளவியாவே பண்டாவாக வந்து புரோகிதம் செய்து வைத்தாராம். 'திருப்தி' சொல்லும் நேரம் வந்தபொழுது இத்தனை தொகை கொடுத்தால்தான் ஆயிற்று என்று முரண்டு பிடித்தாராம். காசி பல்கலைக் கழகத்துக்கு பிகானேர் மன்னரிடம் கேட்ட அதே நன்கொடைத் தொகை அது. வேறு வழியின்றி மன்னர் அந்தத் தொகையைத் தந்தாராம். அது காசி பல்கலைக் கழகத்துக்குப் போயிற்றும்.

ஆனல் ஸ்ரீ லக்ஷ்மண் பிரசாத் என்னும் கயை அந்தணரைக் கேட்டபொழுது, ''அதெல்லாம் அந்தக் காலமாயிருக்கலாம். இந்தக் காலத்தில் நீங்கள் தருவதைக் கொண்டு நாங்களும் திருப்தியுறுகிறோம்; உங்களுக்கும் 'திருப்தி' சொல்கிறோம்!'' என்றார்.

நான்கு வீடுகளும் வாசல்களுமாக இருக்கும் அவர், மக்களுக்குள்ள சிரத்தைக் குறைவைச் சுட்டிக் காட்டித் தமது சொச்ச வாழ்க்கை எப்படிப் போகுமோ என்று கவலை தெரிவிக்கிறார்!

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

## பதினோராம் அத்தியாயம்

## கனவும் கற்பனையும்

செம்பியன் வளவன் தன் மகளை அன்புடன் அணைத்துக் கொண்டு, ''அம்மா! கண்ட கனவு எல்லாம் எப்போதும் பலிப்பது கிடையாது. சில சமயம் பலிப்பதும் உண்டு. கனவுகளின் உண்மைக் கருத்தைக் கண்டு பிடித்துத் தெரிந்து கொள்வதோ மிகக் கடினம். ஆயினும், நீ கண்ட கனவைக் கூறு. நான் அறிந்த சொப்பன சாஸ்திரத்தை அனுசரித்து உன்னுடைய கனவு பலிக்குமா, பலிக்காதா என்று பார்த்துச் சொல்கிறேன்'' என்றான்.

மகள் கண்டது ஏதாவது துர்ச் சொப்பனமாயிருந்தால் அதற்கு ஏதாவது நல்ல அர்த்தம் கற்பனை செய்து கூறி அவளுக்குத் தைரியம் சொல்லி விட்டுப் போகலாம் என்று செம்பியன் நினைத்தான்.

மங்கையர்க்கரசி, ''அப்பா! அந்தக் கனவை நினைத்தால் எனக்குச் சந்தோஷமாகவும் இருக்கிறது; பயமாகவும் இருக்கிறது. இதோ பாருங்கள், இப்போது கூட என் தேகமெல்லாம் சிலிர்த்திருப்பதை!'' என்று முன் கையில் ஏற்பட்டிருந்த ரோமச் சிலிர்ப்பைச் சுட்டிக் காட்டிவிட்டு, மேலும் கூறுவாள்:

''சில காலமாவே என்னுடைய கனவில் அடிக்கடி ஒரு சுந்தரமான யௌவன புருஷர் தோன்றி வருகிறார். அவர் என்னை அன்பு கனிந்த கண்களினால் அடிக்கடி பார்க்கிறார். வெளி உலகத்தில் அத்தகைய ஒருவரை நான் பார்த்ததேயில்லை. நம் மாமல்ல சக்கரவர்த்தியைக் காட்டிலும் அவருடைய முகம் களையானது. அவர் என்னைப் பார்க்கும்போதெல்லாம் நீ எனக்கு உரியவள் அல்லவா? ஏன் என்னுடன் இன்னும் வந்து சேரவில்லை? என்று கேட்பது போலத் தோன்றும். அப்போது என் நெஞ்சு படபடக்கும்; உடம்பெல்லாம் பதறும். நேற்று நான் கண்ட கனவிலும் அந்தச் சுந்தரபுருஷர் தோன்றினார். ஆனால், மிக்க பயங்கரமான சூழலுக்கு மத்தியில் அவரை நேற்றிரவு நான் கண்டேன். அவரைச் சுற்றிலும் பத்துப் பன்னிரண்டு பிசாசுகள் அம்மணமாக நின்று ஏதோ கோரமான சத்தம் போட்டுக்கொண்டு கூத்தாடின. அந்தப் பிசாசுகள் ஒவ்வொன்றின் கையிலும் மயில் இறகுக் கற்றை ஒன்று இருந்தது. சில சமயம் அப்பிசாசுகள் தங்கள் மத்தியில் நின்ற சுந்தர புருஷர் மீது மயில் கற்றைகளை வீசி அடிப்பது போல் தோன்றியது! அவர், பாவம்! ஏதோ ஒரு தேக உபாதையினால் கஷ்டப்படுகிறவர்போல் காணப்பட்டார். இதற்கிடையில் அவர் என்னைப் பரிதாபமாகப் பார்த்து, 'இந்தப்



பிசாசுகளிடம் நான் அகப்பட்டுக் கொண்டு விட்டேனே? என்னை நீ காப்பாற்ற மாட்டாயா?' என்று கேட்பது போல் இருந்தது.

''நான் உடனே திரும்பி ஓட்டம் ஓட்டமாக ஓடினேன். எங்கே ஓடுகிறோம் என்ற நினைவே இன்றி நெடுந்தூரம் ஓடினேன். கடைசியாக ஒரு கோயில் தென்பட்டது. அதற்குள் பிரவேசித்தேன். கோயிலுக்குள் அப்போது யாரும் இல்லை. அம்பிகையின் சந்நிதியை அடைந்து முறையிட்டேன். 'தாயே! என் உள்ளம் கவர்ந்த புருஷரை நீதான் காப்பாற்ற வேண்டும்!' என்று கதறினேன். 'குழந்தாய்! பயப்படாதே. என் குமாரனை அனுப்பு



கிறேன். அவன் உன்னுடன் வந்து உன் விருப்பத்தை நிறைவேற்றுவான்!' என்று ஓர் அசரீரி பிறந்தது. அசரீரி சொல்லி நின்றதோ இல்லையோ, அம்பிகை விக்கிரகத்தின் அருகில் திவ்விய மோகன ரூபங் கொண்ட ஒரு பாலன் நின்றதைப் பார்த்தேன். 'என் குமாரனை அனுப்புகிறேன்' என்று தேவி சொன்ன படியால், வள்ளிநாயகன்தான் வரப் போகிறார் என்று எண்ணினேன். ஆனால் அங்கே நின்ற பிள்ளையோ விபூதி ருத்ராட்சம் தரித்த சிவயோகியாகக் காணப்பட்டார். இனிமையும் சாந்தமும் நிறைந்த குரலில் அந்தப் பிள்ளை, 'தாயே! என்னுடன் வா! உன் நாயகனைக் காப்பாற்றித் தருகிறேன்!' என்றார். அந்தத் தெய்விகக் குழந்தையின் திருவாயில், 'உன் நாயகன்' என்ற வார்த்தைகள் வந்ததும், எனக்கு மெய் சிலிர்த்தது. உடனே உறக்கம் நீங்கி எழுந்துவிட்டேன்! அந்தச் சுந்தர புருஷர் காப்பாற்றப்பட்டாரோ இல்லையோ என்ற சந்தேகத்தினால் இன்னமும் என் உள்ளம் துடித்துக் கொண்டிருக்கிறது. நான் கண்ட கனவின் பொருள் என்ன, அப்பா? அதனால் எனக்கு ஏதேனும் தீமை விளையுமா? அல்லது நன்மை ஏற்படுமா?'' என்று புதல்வி கேட்டு வாய் மூடு முன்னே, ''கட்டாயம் நன்மைதான் ஏற்படும்!'' என்று செம்பியன் உறுதியாகக் கூறினான்.

சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்துவிட்டு அச்சோழர் பெருந்தகை மேலும் கூறியதாவது: ''நீ கண்ட கனவு ஏதோ தெய்விகமாகத் தோன்றுகிறது. உன் மனத்துக்கிசைந்த சுந்தர மணவாளனை நீ இங்கேயே அடையப் போகிறாய். அப்படி நீ அடையும் மணாளனுக்கு ஏதோ பெரிய கஷ்டங்கள் நேரலாம் என்றும், நமது குல தெய்வமாகிய முருகப் பெருமானின் அருளால் அந்தக் கஷ்டங்கள் எல்லாம் நீங்கும் என்றும் உன்னுடைய கனவிலிருந்து ஊகித்து அறிகிறேன். என் அருமை மகளே! ஒரு விஷயத்தில் நீ உறுதியாக இருக்க வேண்டும். நான் இல்லாத சமயத்தில் உன்னைத் தேடி அதிர்ஷ்டம் வந்தால் அதை நீ வேண்டாம் என்று தள்ளாதே! இராஜ குலத்தில் பிறந்தவன் எவனாவது உன்னைக் கரம் பிடிக்க விரும்பினால், அப்படிப்பட்டவனை மணந்து கொள்ள இப்போதே உனக்கு நான் அநுமதி கொடுத்து விடுகிறேன். போர்க்களத்திலிருந்து நான் உயிரோடு திரும்பி வந்தால் உன்னையும் உன் மணாளனையும் பார்த்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்து ஆசீர்வதிப்பேன். ஒரு வேளை போர்க்களத்தில் உயிர் துறக்கும்படி நேரிட்டால், ஆவி வடிவத்திலே திரும்பி வந்து உங்களை ஆசீர்வதித்துவிட்டு அப்புறந்தான் வீர சொர்க்கம் போவேன்!''

இவ்விதம் கூறியபோது செம்பியன் வளவனின் கண்களிலிருந்து கண்ணீர் தாரையாகப் பெருகியது. மங்கையர்க்கரசியும் தந்தையின் விசால மார்பில் முகத்தைப் பதித்துக் கொண்டு விம்மினாள்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# நெடுமாறன்

மங்கையர்க்கரசி கண்ட கனவின் பொருள் இன்னதென்று செம்பியன் வளவனால் கண்டுபிடிக்க முடியவில்லையல்லவா? இவள் தன் கனவைச் சொல்

"லக்ஸின்
மயக்கும்
புதிய நறுமணம்
மனதைக்
கவர்ந்திழுக்கிறது!"

என்கிறார் காஞ்சனா




மனமகிழ்ச்சியூட்டும் புதிய நறுமணம் அடங்கிய மென்மையான லக்ஸை நீங்களும் விரும்புவீர்கள். அது சுத்தமானது, மிருதுவானது. உங்கள் மேனியை வழவழப்பாகவும் வனப்புடனும் வைக்கிறது.
—ஆம், காஞ்சனாவைப்போன்றே.

**லக்ஸ் — சினிமா நடிகையரின் பரிசுத்தமான, மென்மை தரும் சோப்பு**

ஹிந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு HT-ILL 1622

விக் கொண்டிருந்த அதே நேரத்தில் காஞ்சிக்குத் தெற்கே பத்துக் காத தூரத்தில் வராக நதிக் கரையில் என்ன நடந்து கொண்டிருந்தது என்பதைப் பார்த்தோமானால், ஒருவேளை அந்தக் கனவின் பொருளை நாம் ஊகித்தறிந்து கொள்ளலாம்.

நடுநிசியில் நிலவொளியில் வராக நதிக் கரையானது அது வரையில் என்றும் கண்டறியாத காட்சி அளித்தது. மாபெரும் பாண்டிய சைனியம் அந்த நதிக் கரையில் தண்டு இறங்கி இருந்தது. ஆங்காங்கு அமைந்திருந்த கூடாரங்களின் மீது பறக்கவிட்டிருந்த மீனக் கொடிகள் இளங் காற்றில் படபடவென்று அடித்துக் கொண்டிருந்தன. யானைகளும் குதிரைகளும் ரதங்களும் வண்டிகளும் கண்ணுக்கெட்டிய தூரம் காணப்பட்டன. குளிர் அதிகமில்லாத புரட்டாசி மாதமாகையால், வீரர்கள் பெரும்பாலும் திறந்தவெளியில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தார்கள்.



தூக்கம் வராதவர்கள் ஆங்காங்கே கும்பல் கூடி உட்கார்ந்து கதை பேசிக் கொண்டிருந்தார்கள். நடுநிசியின் நிச்சப்தத்தைக் கலைத்துக் கொண்டு சில சமயம் அவர்களுடைய சிரிப்பின் ஒலி கேட்டது. அத்தகைய கூட்டம் ஒன்றின் அருகில் சென்று அவர்கள் என்ன விஷயத்தைப் பற்றிப் பேசுகிறார்கள் என்று தெரிந்து கொள்வோம்.

பொதுவாக அவ்வீரர்கள் சிறிது கவலையுடனேயே பேசிக் கொண்டிருந்தார்கள். மேலே காஞ்சியை நோக்கிப் போகாமல் மூன்று நாட்களாக அந்த வராக நதிக் கரையில் சைனியம் தங்கியிருப்பதைப் பற்றியும், அவர்களுடைய சேனாதிபதி நெடுமாற பாண்டியனுக்கு என்ன உடம்பு என்பது பற்றியும் அவர்கள் பேசினார்கள். "உடம்பு ஒன்றும் இல்லை; வேறு ஏதோ காரணம் இருக்கிறது!" என்று சிலர் காதோடு காதாகச் சொன்னார்கள். "இளவரசருக்கு மோகினிப் பிசாசு பிடித்திருக்கிறது!" என்று ஒருவன் சொன்ன போது இலேசாகச் சிரிப்பு உண்டாயிற்று.

"என்ன! சிரிப்பு வேண்டிக் கிடந்தது? நாளைக் காலையில் காஞ்சியிலிருந்து பல்லவர் படை கிளம்பப் போகிறது. நாம் நடு வழியில் உட்கார்ந்திருக்கிறோம்!" என்றான் இன்னொருவன்.

"இங்கிருந்து திரும்பி மதுரைக்குத்தான் போகப் போகிறோமோ என்னவோ?" என்றான் இன்னொருவன்.

"அப்படித் திரும்பிப் போவதைக் காட்டிலும் இந்த வராக நதியில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்ளலாம்!" என்றான் இன்னொருவன்.

"ஆகா! உயிரை மாய்த்துக் கொள்ள நல்ல வழி கண்டுபிடித்தாய்! இந்த வராக நதியில் தலைகீழாக நின்றால் தண்ணீர் மூக்கு வரையில் வரும். இந்த நதியில் மூழ்கி உயிரை மாய்த்துக் கொள்ள ரொம்ப கெட்டிக்காரத்தனம் வேண்டும்" என்றான் இன்னொருவன்.

"எது எப்படியிருந்தாலும் நான் திரும்பிப் போகப் போவதில்லை. வாதாபியிலிருந்து அதைக் கொண்டுவருகிறேன், இதைக் கொண்டு வருகிறேன் என்று என் காதலியிடம் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். வெறும் கையோடு போனால் அவள் என்ன சொல்லுவாள்?" என்றான் வேறொருவன்.

"வீரபாண்டிய குலத்தில் பிறந்தவருக்கு இப்படிப்பட்ட விளக்கெண்ணெய் சுபாவம் எப்படி வந்ததோ?" என்று ஒருவன் கூறிப் பெருமூச்சு விட்டான்.

இவ்வாறெல்லாம் மேற்படி வீரர்கள் அலுத்துச் சலித்துப் பேசுவதற்குக் காரணமாயிருந்த பாண்டிய இளவரசன் நெடுமாறனை வராக நதிக் கரையோரமாக அமைந்திருந்த அவனுடைய கூடாரத்துக்குச் சென்று பார்ப்போம்.

ஆம்! இதோ வீற்றிருக்கும் இந்தக் கம்பீரமான சுந்தரபுருஷன்தான் நெடுமாறன். பல்லவ குலம் தோன்றியதற்கு எத்தனையோ காலத்துக்கு முன்னிருந்து வாழையடி வாழையாக

வளர்ந்து வந்த பாண்டிய மன்ன குலத்திலே பிறந்தவன்.

அவனுக்கு எதிரில் ஒரு திகம்பர சமணர் உட்கார்ந்திருக்கிறார். அவருக்கு அருகில் மயிலிறகுக் கற்றை, சுருட்டிய பாய், கமண்டலம் ஆகியவை இருக்கின்றன.

கட்டையாகவும், குட்டையாகவும் மொட்டைத் தலையுடனும் விளங்கிய அந்தத் திகம்பர சமணரைப் பார்த்து நெடுமாறன், ''சுவாமி! இன்னும் எத்தனை நேரம் காத்திருக்கவேண்டும்?'' என்று கேட்டான்.

அவன் கேட்டு வாய் மூடுவதற்குள்ளே எங்கேயோ வெகு தூரத்திலிருந்து ஒரு மெல்லிய கம்பன சப்தம்—உடுக்கு அடிப்பது போன்ற சப்தம்,—வரலாயிற்று. 'தரிரிம்' 'தரிரிம்' என்று ஒலித்த அந்தச் சப்தம் மெல்லியதாக இருந்தபோதிலும் காது வழியாக உடம்புக்குள்ளே புகுந்து உடம்பின் ஒவ்வோர் அணுவையும் ஒரு குலுக்குக் குலுக்கியது.

''அதோ! நமக்கு அழைப்பு வந்துவிட்டது! இளவரசே! கிளம்புங்கள்!'' என்றார் அந்தச் சமண முனிவர்.

நெடுமாறன் மறுமொழி கூறாமல் புறப்பட்டான். இருவரும் கூடாரத்திலிருந்து வெளியில் வந்து நதிக் கரை ஓரத்தை அடைந்தனர்; அங்கே ஒரு படகு காத்திருந்தது. அதன் இரு முனையிலும் இரு வீரர் துடுப்புடன் காத்திருந்தனர்.

நெடுமாறன் படகில் ஏறுவதற்கு முன் ஒரு கணம் தயங்கினான். அதைப் பார்த்த சமணர், ''இளவரசே! தங்களுக்கு அச்சமாயிருக்கிறதா? அப்படியானால் வரவேண்டாம்! திரும்பிப் போய் விடுங்கள்!'' என்று கூறவும், நெடுமாறன் அவரைப் பார்த்து, ஒரு தடவை அலட்சியமாக 'ஹும்' என்று சொல்லிவிட்டுப் படகில் முன்னதாகப் பாய்ந்து ஏறினான்.

சமண முனிவரும் ஏறிக் கொண்டார்.

வீரர்கள் சத்தம் அதிகமாகக் கேட்காத வண்ணம் துடுப்பை மெதுவாகப் போட்டு ஜாக்கிரதையாகப் படகைச் செலுத்தினார்கள்.

படகு அக்கரையை அடைந்தது.

வீரர் இருவரையும் அங்கேயே படகுடன் காத்திருக்கும்படி சொல்லிவிட்டு நெடுமாறனும் சமண முனிவரும் மேலே சென்றார்கள்.

போகப்போக, உடுக்கையின் ஒலி அதிகமாகிக் கொண்டு வந்தது. அந்த ஒலியானது ஒரு வகைக் காந்த சக்தியைப் போன்று நெடுமாறனைக் கவர்ந்து இழுத்தது. இனிமேல் அவன் விரும்பினாலும் திரும்பிப் போக முடியாதபடி அதன் சக்தி கணத்துக்குக் கணம் அதிகரித்துக் கொண்டிருந்தது. நெடுமாறனின் நடையும் விரைவாகிக் கொண்டு வந்தது. கடைசியில் அவனுடைய நடை ரொம்ப வேகமாகி ஓட்டமாகவே மாறியது.

''இளவரசே! நில்லுங்கள். நாம் சேர வேண்டிய இடம் இது தான்!'' என்று சமண முனிவர் கூறியது கனவிலே கேட்பது போல் நெடுமாறன் காதில் கேட்டது.

நெடுமாறன் நின்றான். அவனுக்கு எதிரே பாறையில் குடைந்த குகை ஒன்று காணப்பட்டது. குகையின் வாசலில் இரண்டு துவாரபாலர்கள் நின்றார்கள். உண்மையில் கல்லில் செதுக்கிய சிலைகள்



தாம் அவை. எனினும், மயக்கத்தில் ஆழ்ந்திருந்த இளவரசன் ஒரு கணம் அவர்கள் உண்மையான காவலர்கள் என்றே நினைத்தான்.

குகைக்குள்ளேயிருந்து மங்கலான வெளிச்சம் வந்து கொண்டிருந்தது. உடுக்கையின் சப்தமும் அக்குகைக்குள்ளிருந்துதான் வந்தது.

ஆம்! இந்தப் பாறையும் குகையும் துவாரபாலர் சிலைகளும் நாம் ஏற்கனவே பார்த்தவைதாம்.

ஒன்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஆயனச் சிற்பியார் குடைந்தெடுத்த குகைதான் அது. அந்தக் குகையைத் திகம்பர சமணர்கள் கைப்பற்றிக் கொண்டிருந்தார்கள். (தொடரும்)



# ஒவ்வொரு நாளும் புத்தம் புதுமை...
# ரெக்ஸ் ஜெல்லியின்
# பழக்கமான இனிமை!

**தயாரிப்பது எளிது,**
**தேவையில்லை பாலும் சர்க்கரையும்.**

1 பைன்ட் நீரைக் கொதிக்கவிடுங்கள். அதில் ஒரு பேக்கெட் ரெக்ஸ் ஜெல்லி படிகங்களைப் போட்டுக் கிளறுங்கள். பாலும் சர்க்கரையும் தேவையில்லை. குளிரவிடுங்கள். பின்னர் அதை ரெ:ஃப்ரிஜரேட்டரிலோ அல்லது பனிக்கட்டிமீதோ வைத்துப் படியவிடுங்கள். நன்றாக படிந்ததும், எடுத்துப் பரிமாறுங்கள். அப்படியே அல்லது பழம், கஸ்டர்டு, கேக், ரபடி, பாயசம் அல்லது நீங்கள் விரும்பும் எதனுடனும்!

அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப்பட்டதால், ஜெல்லி படிகங்களிலேயே மிகச் சிறந்தவை ரெக்ஸ் ஜெல்லி படிகங்கள். ஒரு பேக்கெட் வீட்டில் இருக்கட்டும்...... எப்போதுமே! வாரத்தின் ஒவ்வொரு நாளும் இனிமையான புட்டிங்குகளும் பழத்தின்பண்டங்களும் தயாரியுங்கள்







**ஜெல்லி படிகங்கள்**



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா) பிரை லிட்.** பம்பாய்



OBM-1893-TM



# இரகசியம்! அதிசயம்!

## திங்கள் தரும் தித்திப்பு



**செர்ரி.**
பிள்ளைகளுக்குப்
பிடித்தமானது.
சின்னஞ் சிறு
கிண்ணங்களில்
சிங்காரச் செர்ரி
ஒவ்வொருவருக்-
கும் ஒவ்வொன்று!

## செவ்வாய் தரும் சிறப்பு:



**அன்னாசி.**
ருசிக்க ருசிக்க
ரசிக்கலாம்:
உற்றாருக்கும்
உறவினருக்கும்
உகந்தது.
உருசியின்
ஊற்று!

## புதன் தரும் புதுமை



**ராஸ்பெர்ரி.**
ரசமான
ரத்தச் சிவப்பு.
என்றும்
எப்போதும்
உண்ணச்
சிறப்பு!

## வியாழன் தரும் விருந்து:



**ஸ்ட்ராபெர்ரி.**
பாட்டிமார்
ரசிப்பது:
பாப்பாவும்
பெரியவரும்
கூடப் புசிப்பது!

## வெள்ளி தரும் அள்ளி:



**ஆரஞ்சு.**
அள்ளிப்
பருகும் சுவை
ஆரஞ்சுச்
சுவையுடன்
அருமையான
சுவை!

## சனி தரும் கனி:



**லெமன்.**
இனிப்பும்
புளிப்பும்
தருவதில் லெமன்
விருந்தினில்
மகிழ்ச்சியை
அளித்திடும்
மன்னன்

## ஞாயிறு தரும் ஞாபகம்:



பழச்சுவை மிகுந்த செக்ஸ் ஜெல்லியை நினைக்க நினைக்க நாவில் நீர் ஊறும்! க்ரீம் மற்றும் பாதாம் பருப்புடன் கலந்தால் சுவையோ சுவை! சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி போல.



# வர்ணப்பூச்சும் வண்ணச் சிரிப்பும்




ஷாலிமார் வர்ணங்களைத் தயாரிப்பவர்கள் தங்கள் நிறுவனத்தில் பணியாற்றுவோரின் பத்திரிகையாக 'ஷாலிமார் ஸ்டாண்டர்ட்' என்ற ஓர் ஏட்டினை வெளியிடுகிறார்கள். அதில் பெயிண்ட் அடிக்கும்போது ஏற்படும் நகைச்சுவை நிகழ்ச்சிகளின் தொகுப்பு ஒன்று இடம் பெற்றுள்ளது. பல்வேறு மேனாட்டுப் பத்திரிகைகளிலிருந்தும் எடுக்கப்பட்ட அந்த ஜோக்குகளில் சில :



"ஒண்ணுமில்லே, என் வீட்டுக்காரர்தான்! அது சரி, நீ எதிர் வீட்டுக்காரங்களைப் பத்தி ஏதோ சொல்லிக்கிட்டிருந்தியே, என்ன ?"



"குடும்பத் தலைவி (விருந்தாளியிடம்): இதோ பாருங்க, அவர்கிட்டே பெயிண்ட் அடிக்கிறது பத்தியோ ஏணிகள் பத்தியோ எதையாவது பேசித் தொலைக்காதீங்க !"



"ஆ! அந்தக் கலர்தான்! அதுதான் எனக்குத் தேவை !"



"பெயிண்ட் அடிக்க வந்தவனிடம் எதுக்கு அரசியல் தர்க்கத்திலே இறங்கறீங்க ? பேசாம அவனை வேலே செய்ய விடப்படாதா ?"



"காப்பி இன்னும் கொஞ்சம் அழுத்த மான நிறத்திலே இருக்கலாம்!"



"அவனைப் பதில் பேச முடியாமலே அடிச்சுட்டியே, பேஷ்!"

# வட்ட மேஜை

## குமரனுக்குக் கற்கோயில்

திரு விழிநாதன் அவர்கள் ஜபல்பூர் வந்து விட்டு இங்கு வளர்ந்தோங்கிப் புகழ் பரவிப் பணிபுரிந்து வரும் "ஜபல்பூர் தமிழர் மன்றம்" பற்றி ஒரு வரிகூட எழுதாமல் விட்டிருப்பது வியப்பளிக்கிறது.

இங்கு கல்லுடைத்து வாழும் பலநூறு தமிழர்கள் ஒன்றுகூடி, தங்களின் ஏழ்மையை யும் மறந்து காணிக்கை செலுத்திப் பொருள் திரட்டி குன்றுதோறும் ஆடிவரும் குமரன் வேலவனுக்கு ஒரு கற்கோயில் வானளாவ எழுப்பிக் குடமுழுக்கு நீராட்டி வணங்கி வழி படுவதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

'பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே இங்கு வந்து குடியேறிவிட்ட தமிழ் மக்கள் தங்கள் பண்பாட்டையும், கலையையும் தொடர்ந்து மறக்காமல் இருக்க, நூறு ஆண்டுகளுக்கு முன்பே கட்டிவைத்திருக்கும் பழம்பெரும் கோவில், 'ஆதி பராசக்தி அம்மன் கோவில்'.

ஜபல்பூர்,
14–4–75 கனிமொழி

## எண் தவறு!

"ஹலோ கம்ப்யூட்டரா?" என்ற தலைப்பில் கோமதிசுவாமிநாதன் மதுரைக்கு நேரடியாக டெலிபோன் செய்ய 9452 எண் களைச் சுற்ற வேண்டும் என்று கூறியிருக்கின் றார். இது தவறு. மதுரைக்கு நேரடியாக டெலிபோன் செய்ய 946 எண்களைத்தான் சுற்ற வேண்டும்.

சென்னை-33
8-5-75 வெ. சீனிவாசன்

(0 கோட்' எண் சமீபத்தில் மாறியது - ஆர்)

## ஒருமைப்பாட்டுச் சிற்பி!

"வருகவே! எங்கள் பஞ்சாப்
மாநிலம் வந்து வாழ்க!
தருகிறோம் தொழிலும் இங்கே!
தடையில்லை, வாழ்வீர், நீங்கள்!
மருவிலா இந்தி யத்தாய்
மாநிலம் எதனை விட்டும்
வருகவே!" என்றார், பஞ்சாப்
மாநில முதல்வர், நண்பாய்!

"வடக்குறும் பஞ்சாப் தன்னில்
வடித்திடில் தொழிலின் சாலை
கொடுக்கிறோம் சலுகை!" என்றே
கூப்பிட்டே சொல்லி யுள்ளார்!
"தடைக்கல்லே இல்லை! கல்வி
தாய்மொழி எதிலும் ஈவோம்;
அடுத்துடன் வருக!" என்றார்,
அன்புயர் செயில்சிங் நல்லார்!

'பாரதம் ஒன்றே; எங்கும்
பணிசெயும் உரிமை உண்டு!
சீரமை மொழிகள் எல்லாம்
தேயத்தில் நிகரே' என்ற
வேரமை வேட்கை தன்னை
விளைத்திடும் சிற்பி ஆனார்,
நேரமை முதல்வர் பஞ்சாப்
நிறைகுண செயில்சிங்! வாழ்க!

சென்னை–44
20–4–75 மனசை ப. கிரன்

# நேசம் மறக்கவில்லை

ஒரு மாதமாகப் பக்கத்து வீட்டு மாடிப் போர்ஷன் காலியாக இருந்தது. காலையில் குளித்துவிட்டு வாசற்பக்கம் வந்தேன். லாரியில் சாமான்கள் வந்து இறங்கிக் கொண்டிருந்தன. யார் புதிதாகக் குடி வருகிறார்கள், என்னென்ன சாமான்களை இறக்குகிறார்கள் என்றெல்லாம் பார்க்க ஆசை இருந்தாலும், இவருக்கு ஆபீசுக்கு நேரமாகிவிட்டதால் ஆசையை அடக்கிக் கொண்டு சமையல் அறைக்கு விரைந்தேன்.

ஓர் அடுப்பில் சாம்பாரும், மற்றொன்றில் பீன்ஸ் கறிக்குமாக லேசாக எரிய விட்டுவிட்டு ஸ்நானம் செய்த தலையைத் துடைத்துக் கொண்டே வாசற் பக்கம் வந்தேன். முன்பு வந்த லாரிக்குப் பின்னால் புதிதாக இன்னொரு லாரியும், தொடர்ந்து ஒரு நீல நிற அம்பாஸிடர் காரும் வந்து சேர்ந்தன. காரிலிருந்து அதை ஓட்டி வந்த வாலிபனும், அவன் பக்கத்திலிருந்த ஒரு பெண்ணும் இறங்கினார்கள்.

அந்தப் பெண் பார்க்க நல்ல அழகாகவே இருந்தாள். வங்காளிகளுக்கே உரித்தான பெரிய நீண்ட கண்கள். வகிட்டில் சிந்தூரம். கூந்தல் ரொம்ப நீளமாக இருந்ததாக சொல்ல முடியாது. மடிப்புக் கலையாத நூல் புடவையை நன்றாக அழகாக உடுத்திக் கொண்டிருந்தாள். கைகளில் இரும்பு, சங்கு, சிவப்பு வளையல்கள் தெரிந்தன. நெற்றியில் சிந்தூரப் பொட்டு, கழுத்தில் ஒன்றுமில்லை. கால்களில் அவள் இட்டிருந்த மருதோன்றி அவள் பாதங்களின் அழகை இன்னும் அதிகமாக்கின.

ரொம்ப வருடமாகக் கல்கத்தாவில் இருந்து கொண்டிருப்பதால் எனக்கு வங்காளம் நன்றாகப் பேசவும், சுமாராக எழுதப் படிக்கவும் தெரியும். சரி! நல்ல சிநேகிதி கிடைத்தாள். இவளைச் சிநேகம் செய்து கொண்டால் பேச்சுக்கு நல்ல துணையாக இருக்கும் என்று எண்ணிக் கொண்டே நின்றவளை "எனக்கு நாழியாயிடுத்து.... சாப்பாடு தயாரா?" என்ற 'இவர்' குரல் உலுக்கியது. அவசரம் அவசரமாகத் திரும்பவும் சமையல் அறைக்கு ஓடினேன்.

ஒரு வாரமாயிற்று. எந்தக் காரணத்தை வைத்துக் கொண்டு அவளுடன் பேசுவது, என்ன பேசுவது என்று யோசித்துக் கொண்டிருந்தேன். அவள் பெயர் தீபா என்றும் கல்யாணமாகி ஏழெட்டு மாதங்களே ஆகின்றன என்றும் அறிந்தேன். இதெல்லாம் என் வேலைக்காரி சொல்லித்தான் தெரியும். இருவரும் தினமும் உலாவக் கிளம்புவார்கள். பிரமாதமாகக் கொண்டை போட்டு, கஞ்சி போட்டு 'இஸ்திரி' செய்த புடவையைக் கட்டிக் கொண்டு அவள் அவனுடன் ஜோடியாக நடப்பதை நான் பார்த்துக் கொண்டே இருப்பேன். கல்யாணங்களுக்குப் போனால் பனாரஸ் புடவை உடுத்திக் கழுத்து நிறைய நகைகள் அணிவாள். புதிதாக இட்ட சிந்தூரத்துடன் தலையை முக்காடிட்டு அவள் வெளியே வந்தால் அவள்தான் கல்யாணப் பெண்ணோ என்று யாரும் நினைக்கலாம்.

கொஞ்சம் கொஞ்சமாக எங்களுக்குள் அறிமுகம் உண்டாகிப் பார்த்தால் சிரிப்பது, ஏதாவது கொஞ்சம் பேசுவது என்று ஆரம்பித்து இப்பொழுதெல்லாம் பொழுது போகாவிட்



# நெஞ்சம்!

திருமதி புவனராஜ்

டால் பகல் வேளைகளில் தீபா எங்கள் வீட்டில் வந்து உட்கார்ந்து கொண்டு ஸ்வெட்டர் பின்னிய படியே மாலை நான்கு மணி வரை பேசிக் கொண்டிருப்பாள். எனக்கும் குழந்தைகள் பள்ளிக்குப் போய்விடுவதால் வேலை அதிகம் இருக்காது. பேசவும் பிடிக்குமாதலால் நன்றாக ஊர் வம்பு நடக்கும்.

நாளடைவில், அவள் வாழ்க்கை அப்படியொன்றும் ராம் நினைப்பது போல் இன்பமயமானதல்ல போலிருக்கிறதே என்று தோன்றியது. அன்று என் வீடு தேடி வந்த தீபாவினிடம் அவள் வாழ்க்கையைப் பற்றிக் கேட்டேன். தீபா வேதனை மிகுந்த தன் கதையைக் கூறலானாள்.

"எங்கோ, யாரோ சொல்லக் கேட்டிருக்கிறேன். உலகமே நாடக மேடை, அதில் நாம் எல்லோரும் நடிகர்கள் என்று! அடடா! என்ன பொன்னான வார்த்தை! அந்த நாடக மேடை இருக்கிறதே.... நிதி! நாடக மேடை அதில் என்னை மாதிரி யாராலும் நடிக்க முடியாது." இப்படிச் சொல்லிவிட்டுக் கலகலவென்று சிரித்தாள். சிரிப்பினூடே கண்ணீர் வழிந்து கொண்டேயிருந்தது.

நான் பதற்றத்துடன், "தீபா, என்ன இது! இவ்வளவு வேதனைப்படுவாய் என்று எனக்குத் தெரியாமல் போனதே! வேண்டாம்" என்றேன்.

"ஏன் நிதி! என்னுடன் சேர்ந்து இத்தனை நாள் சிரித்தாயே. என் வேதனையைக் கிளறி விட்டு இப்போது பாதியில் வேண்டாம் என்றால் எப்படி? சொல்ல ஆரம்பித்து விட்டேன். சொல்லிவிடுகிறேன். இல்லாவிடில் என் நெஞ்சு வெடித்துவிடும்."

அவள் பெற்றோர் பாலிகஞ்சில் ரொம்ப வருடங்களாக வசித்து வந்தார்கள். பழங்கால சம்பிரதாயங்களில் ஊறியவர்கள்.

ஸ்கூல் பைனல் முடிந்து தீபா கல்லூரியில் நுழைந்தாள். படிப்பில் நல்ல கெட்டிக்காரி. எல்லாவற்றிலும் முதல் மார்க்தான். அவள் அப்பா அம்மாவுக்கு இது பற்றி ரொம்பப் பெருமை. தீபாவின் இளமைப் பருவம் எந்த விதக் கவலையும் இல்லாமல், ஆனந்தமயமாக இருந்தது.

ஒரு நாள் காலிங்பெல் அழுத்தும் சத்தம் கேட்டுக் கதவைத் திறந்த தீபா, வாசலில் ஒரு வாலிபன் நின்று கொண்டிருந்ததைப் பார்த்துத் தடுமாறினாள். முதல் பார்வையே அவளை ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. அவனும் கிரங்கித்தான் போனான். சமாளித்துக் கொண்டு, "இது அஜய் பாபு வீடுதானே?" என்றான்.

"ஆமாம்.... நீங்கள் யார்?"

"நான் அவருக்குத் தூரத்து உறவினன். இப்போதுதான் முதல் தடவையாகக் கல்கத்தாவுக்கு வந்திருக்கிறேன். அம்மா பார்த்துவிட்டு வரச் சொன்னாள். அதுதான் வந்தேன். அவர் இருக்கிறாரா, பார்க்கலாமா?"

"உள்ளே வாருங்கள். ஒரு நிமிடம், அப்பா குளிக்கப் போனார், வந்துவிட்டாரா என்று பார்த்து வருகிறேன்" என்றவள் குறுநகையுடன் உள்ளே ஓடினாள்.

அஜய்பாபுவும் அவனும் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். தீபா அருமையாகத் தேநீர் போட்டுக் கொடுத்தாள். அதற்குப் பிறகு முடிந்த போது, நேரம் கிடைத்த போது



**மணி செய்த மாயம்!**

கண்ணனது திருட்டாலே சோர்ந்து போன
கோபிகைகள் திருடுங்கால் மணியடிக்கும்
வண்ணமொரு பொறிசெய்து வைத்துவிட்டார்,
மணிவண்ணன் மெதுவாக உட்பு குந்து
'கண்ணனல்ல, மணியே, நீ அடிக்க வேண்டாம்,
கண்ணனுக்கு உத'வென்று கேட்டிருந்தான்,
'திண்ணமிது, அடியேன் நான்!' என்று சொல்லித்
திருட்டுமணி தனக்குள்ளே நகைத்ததம்மா!

தின்பதற்கு வெண்ணெயினை அவனெடுக்கத்
திசைவெட்டும் கணகணென ஒலியெழுப்பி
'என்செய்வேன், நைவேத்யம் ஆகும் வேளை
எனைமறந்து அடித்தேன்நான்' என்றுகூற
'முன்சொன்ன வார்த்தையினை மறந்து போனாய்,
முறையிதுவா?' எனக் கண்ணன் சினந்தபோது,
'என்சொல்லி விட்டேன்நான், இன்னும் சொல்வேன்
என்றும்உன் அடியேன் நான்' என்றதம்மா!

- திருப்பூர் க. கிருஷ்ணன்

---

அஜய்பாபுவுடன் அவன் வந்து சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் போவான். தீபாவும் சில சமயங்களில் பேச்சில் கலந்து கொள்வாள். இப்படி ஆரம்பித்த சந்திப்பின் தொடர்பாகத் தீபா, கனிலின் நட்பு தொடர்ந்து நெருக்கமாக இழையத் தொடங்கிக் காதலாக மலர ஆரம்பித்தது.

தீபாவின் அம்மாவுக்கு இருவரும் நண்பர்களாகி விருப்பதில் மிகவும் மகிழ்ச்சி. கனில் டாக்டருக்குப் படித்துப் பட்டம் பெற்றிருந்தான். கல்கத்தாவில் பிராக்டிஸ் ஆரம்பித்தால் நல்ல வருமானம் கிடைக்கும் என்பதால் இங்கு வந்திருந்தான். எம். எஸ். படிக்கவும் திட்டம் போட்டிருந்தான்.

தீபா பி. ஏ. முடித்ததும் அம்மாவே பேச்செடுத்தாள். தாயிடம் அவள் எந்தவிதமான மறுப்பும் சொல்லாமல், முகமலர்ச்சியுடன் ஆர்வத்துடன், ஒப்புக் கொண்டாள். கனில் இந்தத் திருமணத்தை விரும்பி, எதிர்பார்த்து, ஏன் காத்துக்கூடக் கிடந்ததாகத் தெரிந்தது. தீபாவுக்கும் இதில் எல்லையில்லாத மகிழ்ச்சி. அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி உணர்வு விவரிக்க இயலாத ஒன்று.

பெரியவர்கள் மட்டில் பேச்சுவார்த்தை நடந்து மாதம் தேதி எல்லாம் தீர்மானமாகிவிட்டது. அஜய் பாபுவின் அக்கா ஒருத்தி திருஜ்பூரில் இருந்தவள் தம்பியைப் பார்க்க வந்தாள் திடீரென்று. கல்யாண விவரங்களெல்லாம் அவளிடம் பேசிக் கொண்டிருந்த போது, "ஆமாம், ஜாதகம் பார்த்தீர்களா?" என்றாள் பேச்சின் நடுவே.

அஜய் பாபு, "ஜாதகம் என்ன பார்க்க வேண்டி இருக்கு? பெண்ணும் பிள்ளையும் மனம் ஒத்துப் போயாயிற்று. இருவரும் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். இத்தனை தூரம் பேச்சு வார்த்தை நடந்து முடிந்த பிறகு ஜாதகம் என்று பார்த்தால் பிறகு அதில் ஏதாவது கிளம்பும். நல்ல வரன். இந்த மாதிரி தீபாவுக்கு அமைந்தது எங்கள் எல்லாருக்குமே மிகவும் சந்தோஷம். நீ புதிதாக ஒன்றும் கிளப்பாதே. பேசாமல் இரு" என்றார்.

அத்தைக்கு வந்ததே கோபம். "அதெப்படி முடியும்? கல்யாணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர். நம் வீட்டில் ஜாதகம் பார்க்காமல் கல்யாணம் இது வரை நடந்ததே கிடையாது. நீ நம் பழைய வழக்கங்கள் எதுவும் விடமாட்டாய். நீயே இப்படிச் சொல்கிறாயே! பையன் ஜாதகத்தைச் சாயங்காலம் வாங்கி வா. நாளைக்கு நான் போய் பாலிகஞ்சில் இருக்கும் அந்தப் பட்டா சார்ஜியிடம் பார்த்து வருகிறேன். ஒத்து இருந்தால் கல்யாணத்தை 'ஜாம்' 'ஜாம்' என்று நடத்து. நான் ஏதோ இதில் தடங்கல் சொல்வதாக நினைக்காதே. உனக்கு இருப்பது ஒரே பெண். நாளைக்கு அது கண் கலங்கி நிற்கக் கூடாது பார்... நீயும் நாளைக்கு 'என்ன அக்கா, நீயாவது ஒரு வார்த்தை சொல்லியிருக்கக் கூடாதா?' என்று என்னைக் கேட்கக் கூடாது....." அத்தை நீளப் பிரசங்கமே செய்துவிட்டுப் போய்விட்டாள்.

"அப்புறம்....?" என்றேன்.

"அப்புறம் என்ன நிதி! மறு நாள் அத்தை ஜாதகம் துளிக்கூடப் பொருத்தமில்லை என்றாள். நான் கனிலை மணம் செய்து கொண்டால் ஒரு வருடத்துக்குள் விதவையாகிவிடுவேனாம். கூடவே கூடாது; இந்தத் திருமணம் நடக்கக் கூடாது என்று ஒற்றைக் காலில் நின்று கல்யாணத்தை நிறுத்தி என் மன நிம்மதியையும், மகிழ்ச்சியையும் அடியோடு குலைத்து விட்டாள்."

"நீ எப்படி இதற்குச் சம்மதித்தாய்? நீ படித்த பெண்தானே! ஒரேயடியாக, எனக்கு ஜாதகத்தில் நம்பிக்கை இல்லை. கனிலைத்தான் மணந்து கொள்வேன் என்று அடித்துச் சொல்லுவதற்கென்ன?"

"அப்படிப் பெரியவர்களை எதிர்த்துப் பேசி வழக்கமில்லையே, நிதி! என்னை மணந்து கொண்டால் அவர் இறந்து விடுவார் என்பதை என்னால் எப்படித் தாங்கிக் கொள்ள முடியும்? கனிலைக் கணவனாக அடையும் பாக்கியம் இல்லாவிட்டாலும் நண்பனாகவாவது ஆயுள் முழுதும் பழகிக் கொண்டிருக்கலாமே என்ற நம்பிக்கையும் தோன்றியது. என் கனிலை ஏதோ ஒருவிதத்தில் இழந்துவிட்டாலும் ஒரேயடியாக இழக்கவில்லையே..... எங்கள் நட்பும் தொடர்ந்து இருந்து வந்தது. ஆனால் பெரியவர்களின் தொந்தரவு தாங்க மாட்டாமல் இவரை மணக்கச் சம்மதித்தேன்.

## திருமணம் — நன்றி அறிவிப்பு



கிருஷ்ணகிரி Dr. S. M. நடேச முதலியார் அவர்களின் பௌத்திரியும் திரு N. S ராஜன் அவர்களின் புத்திரியுமான சௌ. விஜய லட்சுமிக்கும், புத்தூர் திரு C. M கதிர்வேலு முதலியார் அவர்களின் புதல்வன் Dr. C. K. பழனி அவர்களுக்கும் 8-5-75 அன்று சென்னை ஸ்ரீ ராஜேஸ்வரி கலியாணமண்டபத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமண வைபவத்துக்கு நேரில் வருகை தந்த அன்பர்களுக்கும் வாழ்த்துக்கள் அனுப்பிய நண்பர்களுக்கும், சுற்றத்தினர்களுக்கும் இதன் மூலமாக எங்கள் மனமார்ந்த நன்றியை அறிவித்துக் கொள்கிறோம்.

திருமதி & திரு N. S. ராஜன்
திருமதி & Dr. C. G. பாஸ்கர்

இவர் மிகவும் சாது, நல்லவர். என்னை எவ்வளவோ உசத்தியாக வைத்துக் கொண்டிருக்கிறார். என் மனமும் கொஞ்சம் மாறி இருக்கிறது.''

''கனில் என்ன ஆனார்?'' என்று கேட்டேன் ஆவலுடன்.

''அதைத்தான் சொல்ல வந்தேன். கனிலை மணக்க முடியாமல் நான் வேறு மணம் செய்து கொண்டாலும், கனிலால் என்னை மறக்கவே முடியவில்லையாம். அத்தையின் பேச்சைக் கேட்டுக் கல்யாணம் நின்று போன சேதி காதில் விழுந்த போது அவர் முகம் போன போக்கை இப்போது நினைத்தாலும் வயிற்றைச் சங்கடம் செய்கிறது. என் திருமணத்தன்று ஊரிலேயே இல்லை. அப்புறம் அவரை நான் பார்க்கவே முடியவில்லை. எத்தனையோ முறை டெலிபோனில்கூட முயற்சி பண்ணினேன். பேசவும் இல்லை. என்னைப் பார்க்க வரவும் இல்லை. கனில் கல்யாணம் செய்து கொள்ளாமல் மேல் படிப்புக்காக இங்கிலாந்துக்குப் போய் விட்டார்.

''பிறகு படிப்பு முடிந்து சர்ஜனாகப் பிராக்டிஸ் செய்து கொண்டிருந்தவருக்குக் குடிப் பழக்கம் வந்து ரொம்பவும் குடிப்பதாகக் கேள்விப்பட்டேன். அப்போதெல்லாம் என் நெஞ்சம் படும் வேதனையை யாரிடமும் சொல்ல முடியாமல் தவித்தேன். இவரிடமும் சொல்ல முடியாது. இவருக்கு முன்னால் வருத்தமாகவும் இருக்க முடியாது. தன் அன்புக் கேள்விகளால் என்னைத் துளைத்தெடுத்து விடுவார். என் மனம் இவரைப் பார்க்கும் போது பரிதாபப்படும். இவ்வளவு அன்பு வைத்திருக்கிறவரை ஏமாற்றுகிறோமே என்ற குற்ற உணர்வு என்னைக் கொல்கிறது. போதாதற்கு என் கனின் ஹரீஷ் ஷெஃப்பீல்டில் இருப்பவன். லண்டனில் கனிலைப் பார்த்து விட்டு வந்திருக்கிறான். குடித்துவிட்டு கனில், 'தீபா! தீபா,' என்று முனகுவதாகவும், மற்றும் பல விஷயங்களும் சொன்னான். அதிலிருந்து என் மனம் இன்னும் தவிக்கிறது. நீதி! என் மனத்தில் உள்ளதைக் கொட்டிவிட்டேன். என் மனப் பாரம் குறைந்திருக்கிறது'' என்றாள். கண்களில் இன்னும் கலக்கம் தெளியவில்லை.

நான் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு பேசாமல் உட்கார்ந்திருந்தேன். இந்தச் சின்ன வயதில் இப்படி ஒரு மனக் கலக்கத்துக்கு ஆளாகி இருக்கிறாளே. வெளிப் பார்வைக்கு எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறாள்! இதென்ன பெண் மனமோ ? பெண்ணான எனக்கே புரியாத புதிராக இருந்தது!

ஒரு மாதம் விளையாட்டுப் போல் ஓடிவிட்டது. தீபா வரவே இல்லை. என்ன வேலையாக இருக்கிறாளோ என்று நினைத்தவாறே ஜன்னலில் அமர்ந்து தெருவை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

''நீதி! நீதி! சட்டுன்னு கதவைத் திற'' என்றவாறே படபடவென்று கதவைத் தட்டினாள் தீபா. அவள் முகம் பேய் அறைந்தது போல் இருந்தது.

நான் பரபரப்புடன் கதவைத் திறந்தேன். திறந்ததுதான் தாமதம், அப்படியே என்னைக் கட்டிக் கொண்டு விக்கி விக்கி அழ ஆரம்பித்து



வாழ்க்கை என்பது அளவு போதாத துப்பட்டி போல. தலைக்கு மேல் இழுத்தால் காலில் குளிரும். காலைப் போர்த்திக் கொண்டால் தலை சில்லென்று இருக்கும். கெட்டிக்கார மனிதன் உடம்பை அந்தத் துப்பட்டிக்குள் சுருட்டி மடக்கிக் கொண்டு நிம்மதியாகத் தூங்குகிறான்.

(மாரியன் ஜேனவர்ட்) - சரஸ்வதி பஞ்சு

---

விட்டாள். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. யாருக்கு என்ன ஆயிற்றோ ! காலையில்கூடச் சிரித்த முகத்துடன் கணவனை அலுவலகத்துக்கு அனுப்பினாளே !

''தீபா ! அழாமல் விஷயத்தைச் சொல் அம்மா !''

''நீதி! என் ஜாதகம் பொருந்தவில்லை. அதனால் என்னை மணம் செய்து கொண்டால் கனில் இறந்துவிடுவார் என்றல்லவா சொன்னார்கள்? நான் விதவையாகிவிடுவேனோ என்று நான் அப்போது கொஞ்சமும் கவலைப்படவில்லை. என் கனிலை என்னால் இழக்க முடியாது. இழக்கக் கூடாது என்ற ஒரே காரணத்தால், அவர் எங்கு இருந்தாலும் மகிழ்ச்சியுடன் இருக்க வேண்டும், அவர் நட்பில், அவர் நினைவில் காலம் தள்ளிவிடலாம் என்ற பிரார்த்தனையுடன் நான் இருந்தேன். அதனாலேயே பெரியவர்கள் உபத்திரவம் தாங்காமல் இரு மணமும் செய்து கொண்டேன். ஆனால் பகவான் வேறுவிதமாக நினைத்திருக்கிறார்.

''என்னுள் தன்னை இழந்துவிட்ட கனில் அந்த நினைவிலிருந்து மீள முடியாமல், தன்னைத் தேற்றிக் கொள்ளத் தெரியாமல், சொல்லப் போனால் என்னைப் போல் நடிக்கத் தெரியாமல், என்னை மறக்கக் குடிப்பழக்கத்தை மேற்கொண்டு இரண்டு நாட்கள் முன் இறந்து விட்டாராம். நீதி, என் ஆயுள் முழுவதும் என் உயிர் நண்பனாக, என் இதயத்தில் அவரைப் பூஜை செய்து இருந்துவிடலாம் என்ற கனவும் பொய்த்து விட்டது. கடைசியில் அவர் சொன்ன வார்த்தையும், 'தீபா, என்னால் உன்னை மறக்க முடியவில்லையே, என்ன செய்வேன்?' என்பதுதானாம். என்னால் அதைத் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. திருமணம் செய்து கொள்ளாமலேயே கனில் இறந்து விட்டாரே! ஜாதகமாம் ஜாதகம்! இப்போது என்ன சொல்கிறது அந்த ஜாதகம்! இப்படி நடக்கும் என்று தெரிந்திருந்தால் நான் அவரை மணந்து கொண்டு கொஞ்ச காலமாவது மகிழ்ச்சியுடன் இருக்கச் சம்மதித்திருப்பேன். எல்லோரும் சேர்ந்து என் வாழ்க்கையை நாசம் செய்துவிட்டார்கள்.....''

ஆத்திரமும், அழுகையும், அளவு கடந்த வேதனையுமாக அவள் குரல் விம்மி வெடித்தது. அழகும், மகிழ்ச்சியுமாகக் கணவனுடன் குடித்தனம் நடத்தி வந்த பாங்கைக் கண்டு வியந்த நான் இந்தப் பெண்ணின் மனத்துக்குள் இவ்வளவு துயரம் அடங்கியிருக்கும் என்று புரிந்து கொள்ளவில்லையே.

# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 44. மாமல்லபுரம்

கல்லிலே சிற்பமாச்சு கனவிலே கண்ட காட்சி
சொல்லிலே சிற்பமாச்சு கல்லிலேகண்ட மாட்சி

மகாபலிபுரம் எனச் சாதாரணமாய்ப் பெயர் வழங்கும் மாமல்லபுரத்துக்கு அப்பெயர் உண்டானது எப்படி? விந்தை மிகு சிற்பபுரியாக அதைப் படைத்தவர் யார் ? இவற்றுக்கு விடைகளாய்ப் பல்வேறு கதைகள் உண்டு. அவற்றுடன் கல்கியும் ஒரு கதையை, ''ஸ்வப்ன லோகம்'' என்ற தலைப்புடன் 5–8–34 ஆனந்தவிகடன் இதழில் வெளியான கட்டுரை ஒன்றில் புனைந்து சொன்னார்.

அதாவது, மாமல்லர் என்ற பட்டப் பெயர் கொண்ட காஞ்சி மன்னர் நரசிம்மவர்மர், வட நாட்டில் தாம் கண்டு வியந்த சிற்பங்கள் கோயில்களைப் போல் தென்னாட்டிலும் படைக்க வேண்டும் என்று ஆசை கொண்டார். அந்த ஆசையை ஈடேற்றுவதற்கு ஏற்றதாக, குன்றுகளும் பாறைகளும் நிறைந்த அந்தக் கடலோரக் காட்டுப் பகுதியை அவர் தேடித் தேர்ந்து, நூற்றுக்கணக்கான சிற்பிகளை அங்கே கலைப் பணியில் ஈடுபடுத்தினார். அவருடைய மேற்பார்வையில் அப்பணி நடந்து கொண்டிருக்கையில், தமது தலைநகரை நோக்கி விரைந்து கொண்டிருந்த பாண்டிய சேனையை எதிர்த்துச் சமராடப் புறப்பட்டார்.

அன்று சிற்பிகளைப் பிரிய முடியாமல் பிரிந்து சென்ற ராஜா வீராவேசத்தோடு போர் புரிந்து பாண்டிய சைன்யத்தை முறியடித்தார். ஆனால் யுத்தத்தில் அவருக்குப் படுகாயம் ஏற்பட்டது. உயிர் போகும் தறுவாயில் அவர் தமது மந்திரியைக் கூப்பிட்டு, ''மந்திரி, நான் போகிறேன். ஆனால் என் பெயர் இவ்வுலகில் என்றென்றும் நிலைத்து விளங்கும்படி, நான் சிருஷ்டித்த ஸ்வப்பன லோகத்தை என் பெயரால் மாமல்லபுரம் என்று அழைப்பீர்களாக'' என்று கூறினார்.

ஆனால் மனிதனுடைய அற்ப ஆசைகளும் நம்பிக்கைகளும் எவ்வளவு துச்சமானவை! ''மாமல்லபுரம்'' என்பது ''மகாமல்லபுரம்'' ''மகாமலிபுரம்'' என்றெல்லாம் மருவிக் கடைசியில் ''மகாபலிபுரம்'' என்று ஆகிவிட்டது. அரும்பாடு பட்டுத் தன்னைச் சிருஷ்டித்த மகா ரஸிகனை மாமல்லனுடைய பெயரைத் தாங்கி விளங்குவதற்குப் பதிலாக, யாரோ புராணக் கதையில் வரும் ஓர் அசுர ராஜன் பெயரால் அது இன்று அழைக்கப்படுகிறது!

மேற்கூறிய சரித்திர வரலாற்றுக்கு ஆதாரங்கள் தெரிந்துகொள்ள விரும்புவோர், மிஸ்டர் ஏ. எச். லாங் ஹர்ஸ்ட், புரொபசர் ஜோவோ டூப்ரீல், டாக்டர் எஸ். கிருஷ்ண சுவாமி அய்யங்கார், ராவ்பகதூர் எச். கிருஷ்ண சாஸ்திரி, ஸ்ரீமான் ஆர். ஸ்ரீனிவாச அய்யங்கார், ஸ்ரீமான் டி. ஜி. ஆராவமுதன் முதலிய ஆராய்ச்சிக்களஞ்சியங்களின்பிரசித்தி பெற்ற நூல்களைப் படிக்க வேண்டாம். ஏனெனில் இந்தப் புத்தகங்கள் எதிலும்அவ்வரலாற்றுக்கு அணுவளவும் ஆதாரம் கிடையாது.

○ பார்த்திபன் கனவு-தலைப்புச் சித்திரம்(வர்மா படம்)








○ இரா. நாகசாமி

○ ''மாமல்லபுரத்தைச் சென்று பார்ப்பவர்கள் கல்கியின் ''சிவகாமியின் சபதத்''தைப் படித்தவர்களாயிருந்தால் தவறாமல் ஆயனச் சிற்பியையும் அவர் மகள் சிவகாமியையும் நினைக்கிறார்கள்.'' - மு. வ.





அங்கே நாத்ரி தாம் ஆலயமும் விக்டர் ஹ்யூகோவும்....

இப்படி எழுதிய கல்கி, பின்னர், ''பார்த்திபன் கனவு'' ''சிவகாமியின் சபதம்'' ஆகிய இரு நாவல்களிலும், அந்தச் சிற்பபுரித் திருப்பணியைத் தொடங்கியவர் நரசிம்ம வர்மரின் தந்தை மகேந்திர பல்லவர் என்றும், நீண்டதொரு போர்க்கால இடைவேளைக்குப் பிறகு, தனயன் அதை மேற்கொண்டு நடத்தினன் என்றும், அப்போது நிலவிய ஆராய்ச்சிக் கருத்துக்களைக் கொண்டு வரைந்தார். இரண்டு நாவல்களிலும் கிட்டத்தட்ட ஒரேவிதமான விவரங்கள்:

அழிவற்ற பரம்பொருளுக்கு அழிவில்லா ஆலயங்களை எழுப்ப விரும்பிய மகேந்திர சக்கரவர்த்தி, அதை எப்படிச் சாதிக்கலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தார். ஒருநாள் அவர் மல்லைத் துறைமுகப் பகுதியில் உலவிக் கொண்டிருக்கையில், உடனிருந்த அரசிளங் குமரன், ஒரு பாறையின் தோற்றம் யானை மாதிரியும் ஒரு குன்றின் தோற்றம் கோயில் மாதிரியும் இருப்பதைக் கண்டு, அவற்றைக் கவனிக்கும்படி தந்தையிடம் வியப்புடன் கூவிச் சொன்னன். அவரும் அந்தத் தோற்றங்களைக் கண்டு அதிசயித்தார். அங்கிருந்த குன்றுகளைக் கோயில்களாயும், பாறைகளை யானை சிங்கம் முதலிய வடிவங்களாயும் செதுக்கச் செய்வதெனத் தீர்மானித்தார்.

விரைவிலேயே அங்கே கலைப் பணி தொடங்கி, முதலில் ஆயனச் சிற்பியின் ஆலோசனையுடனும் பின்னர் அவருடைய தலைமையிலும் நடைபெற்றது. அந்தச் சிற்பபுரி வளர்ந்து விரிந்து கொண்டிருந்ததைக் காணும்தோறும், அது உருவாகக் காரணமாய் இருந்த தமது மகனின் கற்பனு சக்தியை மகேந்திரர் மெச்சினர். ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் வியப்புக்கு உரியதாய் விளங்கப் போகும் அந்த அற்புதக் கலை நகருடன் அவனுடைய பெயரையும் விளங்க வைக்க விரும்பினர். ஏற்கனவே அவனுடைய மல் யுத்த வன்மையை மெச்சி அவனுக்குத் தாமே சூட்டியிருந்த ''மாமல்லன்'' என்ற பட்டத்தையொட்டி ''மாமல்லபுரம்'' என அதற்குப் பெயரிட்டார்.

முழுமையான சிற்பபுரியாக மாமல்லபுரம் நிறைவடைவதற்கு முன்னல் போர்கள் மூண்டு நீடித்து நடந்தன.





....இங்கே மாமல்லபுரமும் கல்கியும்.

பல ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் அங்கே, வாதாபியை வென்ற புகழையும் சக்கரவர்த்தி மகுடத்தையும் சூடிய மாமல்லர் கலைப் பணியைத் தொடரச் செய்தார்......

இந்த விவரம் அடங்கிய இரு நாவல்களும் வெளியானதற்குச் சில ஆண்டுகளுக்குப் பிறகு, 1962யில், தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் இயக்குநர் இரா. நாகசாமி, தாம் செய்த ஆராய்ச்சிகளைக் கொண்டு, மாமல்லபுரத்துச் சிற்பங்களைத் தோற்று

வித்தவர் யார் என்பது பற்றிப் புதியதொரு கருத்தைத் தெரிவித்தார். அந்தக் கருத்தின்படி, அந்தச் சிற்பங்களைச் செதுக்கச் செய்த பெருமைக்கு உரியவன், இராஜசிம்மன் என்ற இரண்டாம் நரசிம்மவர்மன். (அதாவது, முதலாம் நரசிம்மவர்மனுன மாமல்லருக்குப் பிந்தையவன்.)

இந்தக் கருத்தையும், முன்பு நிலவிய வேறு கருத்துக்களையும், ''மாமல்லை'' என்ற நூலில் இரா. நாகசாமி குறிப்பிட்டுள்ளார். 1968ல் வெளியான இப்புத்தகத்தில், ''கற்பனையே'' என்ற தலைப்புடைய அத்தியாயத்தில், மாமல்லபுரத்தைப் படைத்தவரின் மனத்தில் பொங்கிய கற்பனையையும் அதன் விளைவையும் ஆசிரியர் வர்ணித்திருக்கிருர் :

கலைக் கடலாகிய மன்னன் மாமல்லபுரத்துக் கற்குன்றுகளின் ஊடே உலவி வருகிருன். வெண்ணிலவின் கதிர்கள் மாமல்லபுரத்தைக் கனவுலகாகச் செய்திருக்கக் கூடும். அங்குள்ள ஒவ்வொரு பாறையும் இவன் மனத்தில் ஒரு கலைக் காட்சியாகத் தென்படுகிறது. புதுப் புது உருவங்களில் அவைகளைக் காண்கிருன். அங்கு பாறைகள் மறைந்து பலப் பல குகைகளும், இரதங்களும், சிற்பங்களும் காட்சியளிக்கின்றன. அவனே சக்கரவர்த்தி! உன்னதமான இச்சைகளை உடையவன். ஆணையிடும்போதில் இன்பம் காண்பவன். ஆக்ஞாரசன். அவன் ஆணையை நிறைவேற்ற ஏராளமான சிற்பிகள் காத்து நிற்கின்றனர். எனவே இச்சைகள் எல்லாம் பூர்த்தி யடைந்தவனுக இச்சாபூரணன் ஆகிருன். எந்த எந்தப் பாறைகளில் எந்த எந்த உருவங்களைக் காண்கிருனே அவைகளை யெல்லாம் உண்மைச் சிற்பங்களாக்க ஆணை இடுகிருன். அருகில் நின்ற சிற்பிகளின் தலைவனும் மன்னனைப் போன்ற ஒப்பற்ற கலைஞனுகவே இருந்திருக்கவேண்டும். கல்லெல்லாம் உயிர் பெற்று எழுகின்றன.

எந்தக் காலத்தில் அரசாண்ட எந்த மன்னர் அல்லது மன்னர்களின் கலை ஆர்வத்தினுலும் ஆக்கினையினுலும், கற்கள் எல்லாம் உயிர் பெற்று எழுந்து, அந்தச் சிற்பபுரி அமைந்திருந்தால் என்ன? அதை இந்த வரலாற்றின் நாயகர், தாம் அறிந்திருந்த தம் காலத்து ஆராய்ச்சி முடிவுகளின்படி, தந்தையும் மகனுமான இரு பல்லவ மன்னர்களின் மகேந்திர ஜாலப் படைப்பாகவே கண்டார். அப்படிக் காண்கையில், அவ்விருவரின் வரலாற்று நிகழ்ச்சிகளே அவருடைய கற்பனைத் திரையில் வர்ண ஜாலங்களுடன் எழுந்தன :

மாமல்லபுரத்துக் கடற்கரை...


adsindia

# கொசுக்கடியின் தொல்லை
# சகிக்கமுடியவில்லை





அதிகமாக விற்பனையாகும் கொசு விரட்டி

# உங்களுக்குத்
# தேவை
# ஒடோமாஸ்




லட்சக் கணக்கானோர் நம்பிக்கையுடன் உபயோகிப்பது ● சிறு குழந்தைகளுக்கும் முற்றிலும் பத்திரமானது.

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட்.
43, நகின்தாஸ் மாஸ்டர் ரோடு, பம்பாய் 400 001.

CHAITRA BLS 45 TAM

நீல வானத்திலிருந்து பூரணச் சந்திரன் அமுத கிரணங்களைப் பொழிந்து கொண்டிருந்தான். பூவுலகம் மோகன நிலவிலே மூழ்கி அமைதி குடிகொண்டு விளங்கியது. எதிரே எல்லையின்றிப் பரந்து கிடந்த வங்காளக் குடாக் கடலில் சந்திரக் கிரணங்கள் இந்திரஜாலவித்தை செய்துகொண்டிருந்தன. கரையோரத்தில் சின்னஞ் சிறு அலைகள் அதிக ஓசை செய்து அமைதியைக் குலைக்க விரும்பாதவை போல் இலேசான சப்தத்துடன் எழுந்து விழுந்து கொண்டிருந்தன.

கடல் ஓரத்து வெண் மணலில் நாங்கள் உட்கார்ந்திருந்தோம். ரசிகமணி ஸ்ரீ டி.கே. சிதம்பரநாத முதலியார் அவர்களும் இன்னும் இரு நண்பர்களும் நானும் இருந்தோம். வேறு மனிதர்களோ பிராணிகளோ கண்ணுக் கெட்டிய தூரம் வரை காணப்படவில்லை....

ரஸிகமணி அவர்கள் வழக்கம்போல் கவிதையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

''விதியின் எழுத்தைக் கிழித்தாச்சு — முன்பு
விட்ட குறை வந்து தொட்டாச்சு''

என்ற ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியாரின் பாடல் வரிகளை அழுத்தந் திருத்தமாக எடுத்துரைத்தார்கள்.

''முன்பு — விட்ட குறை வந்து தொட்டாச்சு'' என்னும் வரி ஒரு சக்தி வாய்ந்த மந்திரத்தைப் போல் என்னை மதிமயங்கச் செய்தது. அந்தக் கடற்கரை மணலில் அதே மாதிரி வெண்ணிலவில் இதற்கு முன் எத்தனையோ தடவை நான் உட்கார்ந்திருந்ததாகத் தோன்றியது. முந்திய பிறவிகளில் விட்ட குறைதான் இங்கே என்னைக் கொண்டு வந்து சேர்த்து இன்று இந்தக் கடற்கரை ஓரத்தில் உட்காரச் செய்திருக்கிறது என்றும் தோன்றியது.

கடலிலே ஆயிரமாயிரம் படகுகளும் கப்பல்களும் திடீரென்று காட்சியளித்தன. கரையிலே கூட்டம் கூட்டமாக ஆடவரும் பெண்டிரும் நடமாடிக் கொண்டிருந்தார்கள். சற்றுத் தூரத்தில் மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும் எழுந்தன. அவற்றின் உச்சியில் ரிஷபக் கொடிகளும், சிங்கக் கொடிகளும் உல்லாசமாகப் பறந்தன. இனிமை ததும்பிய இசைக் கருவிகளிலிருந்து எழுந்த சங்கீதம் நாற்புறமும் சூழ்ந்து போதையை உண்டாக்கிற்று. கண்ணுக்குத் தெரிந்த பாறைகளில் எல்லாம் சிற்பிகள் கையில் கல்லுளியை வைத்துக்கொண்டு வேலை செய்தார்கள். எங்கேயோ யாரோ காலில் கட்டிய சதங்கை ஒலிக்க நடனமாடிக் கொண்டிருந்தார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அந்த அகக் காட்சிகள் தெளிவடைந்தன. உருவங்களும் முகங்களும் இனந் தெரியுமாறு எதிரே தோன்றின.

ஆயனரும் சிவகாமியும், மகேந்திர பல்லவரும் மாமல்லரும், பார்த்திபனும் விக்கிரமனும், அருள்மொழியும் குந்தவியும், பொன்னனும் வள்ளியும், கண்ணனும் கமலியும், புலிகேசியும் நாகநந்தியும் என்னுடைய மனக்கண் முன்னால் பவனி வந்தார்கள். அப்படிப் பவனி வந்தவர்கள் என் உள்ளத்திலேயே குடிபுகுந்து விட்டார்கள்.

(சிவகாமியின் சபதம் முன்னுரை)

அப்படிப் புகுந்த அந்தப் புராதன மாந்தர் பின்னர் கல்கியின் நவீனங்களில் புகுந்தார்கள்; அவற்றின் மூலம் எண்ணிலா வாசகர்களின் உள்ளங்களில் புகுந்தார்கள்; இன்னும் புகுந்து கொண்டே இருக்கிறார்கள்.

தமது சரித்திர நாவல்களுக்கான அடிப்படை, தமது மாமல்லபுரம் விஜயத்தின் போது அமைந்து விட்டது என்பதைத்தான், கலை வண்ண மொழியில் அந்த முன்னுரை வாக்கியங்களில் தெரிவித்திருக்கிறார் கல்கி. அதே முன்னுரையில் மேலும் அவர், பண்டைத் தமிழகத்தின் பெருமை பற்றியும் பண்பாட்டின் சிறப்பு பற்றியும், தாம் படித்ததும் கேள்விப்பட்டதும் உண்மையானவைதாம் என்பது, மாமல்லபுரத்துச் சிற்பங்களை நேரில் கண்டபோது உறுதிப்பட்டது என்றும் சொல்லியிருக்கிறார். அந்தப் பெருமையையும் சிறப்பையும் தம்மைப் போல் பலரும் உணர்ந்து மகிழ்ந்து பெருமிதம் கொள்ள வேண்டும் என்று அவர் ஆசைப்பட்டார். அவ்வித ஆசையிலே விளைந்து கனிந்த இலக்கியப் படைப்புகளும் பெருமையும் சிறப்பும் வாய்ந்தனவாய் அமைந்து விட்டன.

சரித்திர நாவல்கள் கல்கியின் கற்பனையில் தோன்றுவதற்கும், அவை மூலம் அவருக்குப் பெரும் புகழ் கூடுவதற்கும் பெரிதும் காரணமாயிருந்த

**பிரமாதமான பெயர்!**

கோயம்புத்தூர் கடை வீதியில் இருக்கும் ஒரு மூக்குக் கண்ணாடிக் கடைக்குச் சூட்டியிருக்கும் பெயர்: கெட்டிக்காரன் அண்ட் கோ. — வி. எஸ். ஆர்.




**என்னப்பா இருக்கு? இட்லிங்க...!**

மதுரையில், மேல மாசி வீதியில் முறுக்கு, வடை, இட்லி விற்பனை செய்யும் ஸ்தாபனம் உள்ளது. அந்த ஸ்தாபனத்தின் பெயர் என்ன தெரியுமா? ''என்னப்பா இருக்கு...? இட்லிங்க...!'' பெயர் எப்படி? புதுமையாக இருக்கிறதல்லவா?

— வே. ஆ. கோபால்ராஜ

## வானை நோக்கி விரையும் தீ!



ஹாலிவுட் திரைப்பட நிறுவனங்கள் வார்னர் பிரதர்ஸ், ட்வென்டியத் செஞ்சுரி ஃபாக்ஸ் ஆகிய இரண்டும் ஜகப் பிரசித்தமானவை. இந் நிறுவனங்கள் தனித் தனியே இரு நாவல்களைப் படம் பிடிக்க வாங்கின. பிறகு பார்த்தால் இரண்டு நாவல்களின் கதையும் நிரம்ப ஒற்றுமை காணப்பட்டது. ஏறத்தாழ ஒரே கதையை வைத்துக்கொண்டு இரு நிறுவனங்களும் போட்டி போடுவதற்குப் பதில் இருவரும் இணைந்து ஒரே படத்தை எடுக்கலாமே என்று தீர்மானித்தனர். ஹாலிவுட் சரித்திரத்தில் முதல்முறையாக ஏற்பட்ட இந்த ஒத்துழைப்பின் விளைவு ஒரு கோடியே நாற்பது லட்சம் டாலர் செலவில் உருவாகும் ''தி டவரிங் இன்ஃபர்னோ'' என்ற திரைப் படம். எம்பயர் ஸ்டேட் பில்டிங் போன்று ஒரு வானளாவும் கட்டிடத்தில் தீப்பிடித்துக் கொண்டால் என்னென்ன விளைவுகள் ஏற்படும்; எப்படியெல்லாம் உணர்ச்சிகள் பொங்கும் என்பதைப் படம் பிடிக்க 57 செட்டுகள் போடப்பட்டன. நான்கு காமிராக்குழுக்கள் தனித்தனியேயும் ஒருங்கிணைந்தும் செயல்பட்டன!

அவருடைய அந்த மாமல்லபுரப் பயணம், 1934 கோடை காலத்தில் நிகழ்ந்தது. அந்தப் பயணத்துக்குச் சில வாரங்களுக்குப் பிறகுதான், இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் குறிப்பிட்ட ''ஸ்வப்ன லோகம்'' என்ற அவருடைய கட்டுரை வெளியாயிற்று. அதை அடுத்து, அதே பயணம் பற்றிய ''மகேந்திரஜாலபுரம்'', ''கல் சொன்ன கதை'' என்ற கட்டுரைகள் வெளியாயின. பயணங்கள் பற்றியும் கலைகள் பற்றியும் அவர் எழுதியுள்ள தரமான கட்டுரைகளுக்கு, அவை மூன்றும் முன்னோடிகள்.

முன் பார்த்த ''சிவகாமியின் சபதம்'' முன்னுரையின் பகுதியில், டி.கே.சி.யுடன் மற்றும் ''இரு நண்பர்கள்'' எனக் கல்கி குறிப்பிட்டிருக்கிறார் அல்லவா? ''ஹரிஜன்'' சாஸ்திரியும் அவருடைய மனைவி விசாலாட்சி அம்மாளுமே அந்த நண்பர்கள். அந்த அம்மாள் பாடிய பாடல்களில் ஒன்றைத் தான், டி.கே.சி. திரும்பச் சொல்லி விளக்கம் கூறினார்.

அந்த அம்மாள் இப்போது பம்பாயில் இந்துஸ்தானி இசையில் புகழ்கொண்ட தமது மகள் லட்சுமி சங்கருடன் வசித்து வருகிறார். கல்கியின் இலக்கியவாழ்க்கையில் மிக முக்கியமானதாயும் பயனுள்ளதாயும் அமைந்த அந்தப் பயணம் பற்றி, அந்த அம்மாளிடம் விவரம் கேட்டு எழுதியதற்கு, அவர் அனுப்பிய குறிப்பு:

மகாபலிபுரம் பயணத்துக்கு டி.கே.சி.தான் எல்லா ஆயத்தங்களும், ஏற்பாடுகளும் செய்து எங்களைத் தமது காரில் கூட்டிச் சென்றார். ஒரு நாள் மாலை சென்னையிலிருந்து புறப்பட்டு இரவில் திருக்கழுக்குன்றத்தில் தங்கி, மறு நாள் மகாபலிபுரம் போய்ச் சேர்ந்தோம்.

அங்கே ரசிகமணியின் நண்பர் ஒருவர் மூன்று நாள் தங்குவதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து வைத்திருந்தார். அப்போது, அதாவது நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால், மகாபலிபுரம், தனியான சொப்பனபுரியாகவே இருந்தது. ஜனநடமாட்டம் அதிகம் கிடையாது. கிலமான சில வீடுகள்தான் உண்டு. பாதி இடிந்த சத்திரம் ஒன்றில் எங்களுக்கு ஜாகை சாப்பாடு எல்லாம். வெயில் உறைக்காத காலை மாலை வேளைகளில் நெடுகிலும் சுற்றிப் பார்ப்போம். மற்ற வேளைகளில் சத்திரத்து மரப் பெஞ்சுகளில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்போம். சிற்பம், சித்திரம், கவிதை என்று ஒரே பேச்சு...

பௌர்ணமி நிலவு; சவுக்கு மரங்களின் சலசலப்பு; கடல் அலைகளின் ஓயாத மோதல்; தூரத்திலே கடற்கரைக் கோபுரம். பேசிக் கொண்டே இருந்தவர்கள், திடீரெனப் பேச்சை நிறுத்திக் கொண்டு அவரவர் சொந்தச் சிந்தனையில் ஆழ்ந்து விட்டோம். பத்து நிமிஷ நேரம் அப்படி மௌனமாயிருந்தோம். அப்புறம் கல்கி என்னைப் பார்த்து ஒரு பாட்டுப் பாடச் சொன்னார். அப்போது எனக்குச் சிதம்பரக் கும்மிதான் நினைவுக்கு வந்தது. ''சித்தம் சிதம்பரம் ஆச்சுதடி — முன்பு - செய்த வினையெல்லாம் போச்சுதடி'' என்று ஆரம்பித்து ஒவ்வொன்றாகப் பாடினேன். கடைசியில் ''விதியின் எழுத்தைக் கிழித்தாச்சு — முன்பு - விட்ட குறை வந்து தொட்டாச்சு'' என்ற பாட்டுடன் நிறுத்திக் கொண்டேன்.

''ரொம்ப நல்ல பாட்டு'' என்று ரசிகமணி சொல்லி, அந்தக் கடைசிப் பாட்டையொட்டி அவருக்கே தனியான ''இதய ஒலி'' பாணியில் பேசினார்.

என் பாட்டையும் சரி, டி. கே. சியின் பேச்சையும் சரி, வழக்கம்போலக் கல்கி கண்களை மூடிக்கொண்டு தலையை ஆட்டியபடி கேட்டுக் கொண்டிருந்தார்.

ஒரு நாள் கல்கியும் மற்ற மூவரும் பஞ்ச ரதங்களைப் பார்த்துக் கொண்டிருக்கையில், எங்கிருந்தோ ''வழிகாட்டி'' ஒருவன் ஓடி வந்து, அவை பற்றிய புராணக் கதை ஒன்றைப் ''பூர்வத்திலே பஞ்ச பாண்டவர்கள் என்று ஐந்து சகோதரர்கள் இருந்தார்கள்'' என்று தொடங்கி மடமடவென்று ஒப்பித்தான். அவன் சொன்ன கதையை, ''கல் சொன்ன கதை'' என்ற கட்டுரை

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹைடன்ஸா

களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

---

# ஆஸ்துமா
## நிவாரண மூலிகை

ராஜஸ்தான் பிரபல அரசியல் சமூகத் தலைவர் காலஞ்சென்ற ஸ்ரீ சம்பு ாத் அவர்களின் பேரன் **ஸ்ரீ கேசவ் மோஹன் லால்** ஏழைகளுக்கு ஆஸ்துமா நிவாரண மூலிகை வினியோகிக்கிறார். ஸ்ரீ சம்புநாத் அவர்களுக்கு இந்த மூலிகை ஒரு சந்நியாசியால் கொடுக்கப்பட்டு கடந்த 40 ஆண்டுகளாக இலவசமாக வினியோகிக்கப் பட்டது. இத்தன்னலமற்ற சேவைக்கு அரசாங்கம் உபகாரச் சம்பளம் அளித்தது. ஆனால் இந்த ர்பணியை அவ ர தன் பேரனிடம் ஒப்படைத்து விட்டு துறவியானார். தற்பொழுது இப்பணியை பேரன் ந டத்துவதோடு இதற்குப் பண உதவி செய்யுமாறு தனவந்தர்களைக் கேட்டுக் கொள்கிறார். மூன்று டோஸ் மருந்து சாப்பிட்டதுமே ஆஸ்துமாவினால் அவதியுறும் பலர் நிவாரண மடைந்துள்ளனர். ஆஸ்துமாவினால் அவதியுறுபவர்கள் மூலிகைக்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு ஆங்கிலத்தில் எழுதவும்.

**SRI KESHAV MOHAN LAL**
**8, HARALAL DAS LANE,**
**(JORABAGAN PARK). CALCUTTA-6**

---

# குழப்பம் வேண்டாம்....

15 13.5 16.5 16 8 12 8.5 17.5




## ஸமரியாஸ் பைனான்ஸஸ்
### இப்பொழுது அளிக்கும் அபரிமிதமான வட்டி விகிதங்கள்

| | |
|---|---|
| 5 வருஷ ∴ பிக்ஸெட் டெபாஸிட் | 17% |
| 3 வருஷ ∴ பிக்ஸெட் டெபாஸிட் | 16.5% |
| 2 வருஷ ∴ பிக்ஸெட் டெபாஸிட் | 16% |
| 1 வருஷ ∴ பிக்ஸெட் டெபாஸிட் | 15% |
| 6 மாத ∴ பிக்ஸெட் டெபாஸிட் | 13.5% |
| 3 மாத ∴ பிக்ஸெட் டெபாஸிட் | 12% |
| 15 நாள் கோட்டீஸ் டெபாஸிட் | 8.5% |
| 7 நாள் கோட்டீஸ் டெபாஸிட் | 8% |

பெண்மணிகளின் டெபாஸிட்டுகளுக்கு 2 வருஷத்துக்கும் அதற்கு மேற்பட்ட காலத்திற்கும் ½% அதிக வட்டி

சமூக நலம் மற்றும் தர்மஸ்தாபனங்களுக்கு விசேஷ சலுகை உண்டு.

**மாதா மாதம் வட்டி பெற்றுக்கொள்ளலாம்.**




## ஸமரியாஸ் பைனான்ஸஸ்

**Madras-600005 PHONE: 811013**
**Pattom, Trivandrum-4**

IONS SF - 7 Tam

புதிய திட்டம்

# கார்பொரேஷன் பாங்க் அளிக்கும்

# க்ஷேமநிதி

## ரொக்கப் பத்திரங்கள்



உங்கள்
சேமிப்பு
84 மாதங்களில்
இரண்டு மடங்காக
வளர்கிறது

விலைவாசி 'கிடு கிடு' வென்று ஏறும் இந்நாட்களில் வீண் செலவுகளைக் குறைத்து வருவாயைக் கண்காணித்து சேமிப்பு செய்வதுதான் ஒரு குடும்பத்தின் சிறந்த நிர்வாகமாகும். விலைவாசியும் கட்டுக்கடங்கும்.

கார்பொரேஷன் பாங்க் உங்கள் நன்மைக்கென்றே புதியதொரு திட்டத்தை உருவாக்கியிருக்கிறது. க்ஷேமநிதி ரொக்கப்பத்திரங்கள். குறைந்தபட்சம் ரூ. 100 முதலீடு செய்யலாம். கைநிறைய வட்டி. பாதுகாப்பு. கடன் வசதிகள். குறுகிய, இடைக்கால மற்றும் நீண்டகாலத்திற்கு முதலீடு செய்யலாம்.

84 மாதங்களில் உங்கள் சேமிப்பு இரண்டு மடங்காக வளர்கிறது. சிறு சேமிப்பு, குழந்தைகள் நலனுக்கான சேமிப்பு, பாதுகாப்பு நிதிகள் மற்றும் கூட்டு ஸ்தாபனங்களின் உபரி வருமானம், கம்பெனி பாதுகாப்பு நிதி. இவையனைத்தையும் கார்பொரேஷன் பாங்கின் க்ஷேமநிதி ரொக்கப் பத்திரங்களில் முதலீடு செய்யலாம்.


ESTD. 1906

—சிநேக மனப்பான்மையுடன் விளங்கும் வங்கி

## கார்பொரேஷன் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்: உடுப்பி   நிர்வாக அலுவலகம்: மங்களூர்

யில் கல்கி திரும்பச் சொல்லிவிட்டு, இறுதியில் ஒரு குறிப்பைச் சேர்த்தார் :

மேனாட்டு யாத்திரைப் புத்தகங்களில் 'கைட்'கள் என்னும் வழிகாட்டிகளைப் பற்றி எவ்வளவோ படித்திருக்கிறோம் அல்லவா? அத்தகையவர்கள் சிலர் மகாபலிபுரத்தில் இருக்கிறார்கள். எங்களுக்குக் கதை சொன்ன ஆசாமி அவர்களில் ஒருவர்தான். உங்கள் அனுமதியை எதிர்பாராமல் திடீரென்று அவர்கள் கதை சொல்லத் தொடங்கி விடுவார்கள். அப்புறம் அவர்களை நிறுத்தச் செய்வது பிரமப்பிரயத்தனம்தான்.

(ஆ. வி. 26-8-34)

இப்போது அங்கே, பயணிகளின் நடமாட்டப் பெருக்கத்துடன் கைடுகளின் எண்ணிக்கையும் பெருகிவிட்டது. இப்போதும் அவர்கள் புராணக் கதைகளைச் சொல்லத்தான் செய்கிறார்கள். ஆனால் அவற்றுடன் சிவகாமியின் கதையையும் சேர்த்துக்கொண்டிருக்கிறார்கள். ''சிவகாமியின் சபதம் என்று கல்கி ஒரு கதை எழுதினார்...'' என்று தொடங்குகிறார்கள்.

கைடுகள் சொல்வது இருக்கட்டும். ''சிவகாமியின் சபதம்'', ''பார்த்திபன் கனவு'' ஆகிய நாவல்களைப் படித்தவர்களில் யார்தான் மகாபலிபுரத்தில் உலவுகையில், அவற்றில் அது களங்களாகவும் காட்சிகளாகவும் வருவதை நினைத்துப் பாராமல் இருக்க முடியும்? இப்படி நினைவு வருவதை, டாக்டர் மு. வரதராசன், ''தமிழ் இலக்கிய வரலாறு'' என்ற தமது நூலின் கதை இலக்கியம் பற்றிய பகுதியில் குறிப்பிட்டிருக்கிறார் :

தமிழ் நாட்டின் வரலாற்றில் பல்லவ அரசர்களின் வரலாற்றையும் பிற்காலச் சோழர்கள் வரலாற்றையும் நன்கு ஆராய்ந்து அக்கால நாகரிகம், மக்களின் பழக்க வழக்கங்கள், மன நிலைகள் முதலியவற்றைத் தெளிவாக மனத்தில் நிறுத்திக் கொண்டு நாவல்கள் எழுதினார். அந்த வரலாற்றுக் குறிப்புகள் கதை வடிவில் அமைவதற்காகத் தாமே சில கற்பனை மாந்தர்களைப் படைத்துச் சேர்த்தார். அவ்வாறு அவர் படைத்துத் தந்த மாந்தர்கள் இன்று தமிழ் நாவல்கள் கற்ற மக்களின் மனத்தில் நிலையாக வாழ்கிறார்கள், வரலாற்று நூல்களின் பல்லவ மன்னர்களையும், சோழ மன்னர்களையும் விட நிலைபேறு உடையவர்களாக அவர்கள் இன்று படிப்பவர்களின் நெஞ்சில் வாழ்கிறார்கள். அந்த அளவுக்குக் கல்கியின் கற்பனை, ஆற்றல் உடையதாக அமைந்தது. எடுத்துக் காட்டாக, தமிழ் நாட்டின் புகழ் பெற்ற சிற்பக் கலைக் கூடமாக விளங்கும் மாமல்லபுரத்தை (மகாபலிபுரத்தை) சென்று பார்ப்பவர்கள் கல்கியின் 'சிவகாமியின் சபதம்' படித்தவர்களாக இருந்தால், அவர்கள் தவறாமல் ஆயனச் சிற்பியையும் அவருடைய மகள் சிவகாமியையும் நினைக்கிறார்கள். அவர்களை உண்மையாக வாழ்ந்த வரலாற்று மாந்தர்கள் என்று எண்ணி, மாமல்லபுரத்தில் அவர்கள் வாழ்ந்த இடங்களை நினைந்து வியந்து நிற்கிறார்கள். பல்லவ அரசர்களையும் மறந்து அந்தக் கற்பனை மாந்தர்களைப் பாராட்டிப் போற்றுகிறார்கள்.

சிற்பப் புகழுடைய மாமல்லபுரத்துடன் கல்கியின் இலக்கியப் புகழ் இணைந்திருப்பதை, பாரிஸ் நகரில் உள்ள ''நாத்ரி தாம்'' ஆலயத்துடன் விக்டர் ஹ்யூகோவின் புகழ் இணைந்திருப்பதோடு ஒப்பிடத் தோன்றுகிறது. அந்த ஆலயத்தின் பெயரைச் சூட்டி, அதன் உள்ளேயும் சுற்றிலும் களம் அமைத்து, அற்புத நாவல் ஒன்றைப் புனைந்துள்ளார் அந்த ஃபிரெஞ்சு ஆசிரியர். அந்த ஆலயத்தைச் சுற்றிக் காட்டும் கைடுகளும், விக்டர் ஹ்யூகோவின் பெயருடன்தான் தங்கள் வர்ணனையைத் தொடங்குகிறார்கள். கைடுகளின் துணையின்றி அதைப் பார்க்கும் இலக்கிய ரசிகர்களும், அந்த ஆசிரியரையும் அவர் வர்ணித்துள்ள ஆலயத்து நிகழ்ச்சிகளையும் நினைத்துக் கொள்கிறார்கள்.

அங்கே ''நாத்ரி தாம்'' ஆலயமும் விக்டர் ஹ்யூகோவும் போல், இங்கே மாமல்லபுரமும் கல்கியும்! (தொடரும்)

---

## நாடகம் பார்க்கச் சிறைச்சாலை!

கோவையில் நடக்கும் நாடகம் மற்றும் கலை நிகழ்ச்சிகளைக் காண வேண்டும் என்றால் நீங்கள் ஜெயிலுக்குப் போக வேண்டியதுதான்! திடுக்கிடாதீர்கள்! மத்திய சிறைச்சாலையில் ஆயிரத்துக்கு மேற்பட்டவர்கள் வசதியாக அமர்ந்து பார்க்கக்கூடிய அளவுக்கு ஒரு கலை அரங்கம் உள்ளது. ஜெயிலுக்குள் இத்தகைய கலை அரங்கம் இருப்பது இந்தியாவிலேயே கோவைச் சிறையில் மட்டும்தான்!

''இந்தக் கலை அரங்கம் மூலம் கிடைக்கும் வாடகைப் பணம் கைதிகளின் நலனுக்காகச் செலவிடப்படுகிறது. மாதம் ஒரு முறை 16 மி. மீ. புரொஜக்டர் மூலம் கைதிகளுக்கு இந்த அரங்கத்தில் சினிமாப் படங்களும் காட்டப்பட்டு வருகிறது. இதற்கான வசதியும் இதில் இருக்கிறது'' என்கிறார் ஒரு ஜெயில் அதிகாரி.

— வி. எஸ். ராஜகோபால்



# சுடு நெருப்பு

பதினைந்து வருடங்களுக்கிடையில் இந்தத் திருநெல்வேலி என்னமாய் மாறிவிட்டது ! ரயிலடி எதிரே இரு வரிசையில் கடைகள். விரிந்த பேருந்து நிலையம். ஜங்ஷனுக்குப் பந்தல் போட்டது போன்ற ஈரடுக்கு மேம்பாலம். கற்காலக் கட்டிடங்கள் மறைந்து தற்கால நவீன அமைப்புக்கள் மலிந்த கட்டிடங்கள், சிற்றுண்டிச்சாலைகள், ஹோட்டல்கள்....அப்பப்பா!

மூக்கின் மீது விரலை வைக்காத குறையாக அத்தனை மாற்றங்களையும் பேராச்சரியத்துடன் நோக்கிய ஜலால் மரைக்காயருக்கு, 'நம் மகளும் இப்போது இப்படித்தானே பருவச் செழிப்புக் கொழிக்க இருப்பாள்?' என்ற எண்ணம் மேலோங்கியது.

முன்னறிவிப்பின்றித் திடுதிப்பென்று வீட்டில் இறங்கியதும் சமதானியின் முகம் குப்பென்று சிவந்து விடும். அவளைக் கல்யாணம் செய்த மறு வருடம் அந்தமான் சென்று விட்டு மூன்று வருடங்கள் கழித்து வீடு வந்து இறங்கியபோது சமதானியின் சிவந்த கன்னங்கள் என்னமாய்ச் சிவப்பேறி இருந்தன? அதேபோல் இப்பவும்... அப்படித்தானே சிவக்கும்? 'டீ மெஹ்ரு உன் வாப்பா வந்திருக்கு, வந்து பாருடீ' என்பாள்.

இந்தத் தடவை அந்தமான் செல்லும் போது மெஹ்ருன்னிஸாவுக்கு நான்கு வயது இருக்கும். எண்ணிப் பன்னிரண்டு முத்தங்களை அந்தப் பட்டுக் கன்னத்தில் பதித்துச் சென்றேன். ''வாப்பா ! வாப்போவ் !'' என்று வளைய வளைய வருவாள். காலிலே அணிந்திருக்கும் முத்துக் கொலுசின் ஜல் ஜல் நாதம் இதயத்துக்கு இனியதோர் இன்பத்தைத் தந்தது.

''டாக்ஸி வேணுமா?''

''ஆட்டோ வேணுமா?''

ஜலால் மரைக்காயரின் சிந்தனை அறுபட்டது.

லக்கேஜ் சுமந்து வந்த போர்ட்டரை அனுப்பி வைத்துவிட்டு ஹோட்டல் ஒன்றில் டிஃபன் சாப்பிட்டுவிட்டு வெளியே வந்த போதுதான், டாக்ஸி டிரைவரும் ஆட்டோ டிரைவரும் ஜலால்மரைக்காயரிடம் வந்தனர். இருவரில் யாருக்குப் பதிலிறுக்கலாம் என்று ஜலால் மரைக்காயர் தயங்கிக் கொண்டிருந்தபோது, ''ஜட்கா வேணுங்களா? எஜமான்?'' என்று ஜட்காவாலா ரஹ்மத்துல்லா கேட்டான்.

ஜமால் மரைக்காயருக்கு ரஹ்மத்துல்லாவைப் பார்த்ததும் ஒருவித வியாகூலம் தலைதூக்கியது. ரஹ்மத்துல்லாவின் பாட்டனில் இருந்து இந்த ரஹ்மத்துல்லா வரை இதே ஜட்கா ஓட்டிப் பிழைக்கும் தொழிலைத்தான் செய்து வருகிறார்கள். குதிரை மட்டும்தான் மாறியிருந்தது. கூலி வேலை செய்தவர்கள் எல்லாம் குபேரராகி யிருக்கும் இன்றைய நாளில், ரஹ்மத்துல்லாவின் வாழ்வில் மட்டும் இன்னும் ஏனோ மறு மலர்ச்சி ஏற்படவில்லை!

''நான் ஜட்காவிலேயே போய்க்கொள்கிறேன்'' என்று இரண்டு டிரைவர்களுக்கும் பதிலிறுத்த ஜலால் மரைக்காயர் ரஹ்மத்துல்லாவின் பக்கம் திரும்பி, ''மேலப்பாளையம் போகணும்... என்ன வேணும்?'' என்று கேட்டார்.

''மேலப்பாளையம்னு.... ஆஸ்பத்திரி பக்கமா? சந்தைப் பக்கமா? குறுக்குத் துறைப் பக்கமா? எந்தப் பக்கம்?'' போதிய அநுபவம் உள்ளவன் ஜட்காவாலா. ரொம்ப உஷாராக இருந்தான்.

''சப்பாணி லெப்பைத் தெரு... சின்ன பஜார் பக்கம்''.

''லக்கேஜெல்லாம் இருக்கு. இப்போ உள்ள விலைவாசிகளுக்கு நாலு ரூபா கொடுத்தால்தான் கட்டும்.''

''முன்னை விடச் சற்று அதிகம்தான். சரி, புறப்படலாம்.''

குறிச்சி லெவல்கிராஸைக் கடந்ததும் ஜலால் மரைக்காயரின் இதயத்தில் பூரிப்பு பிறந்தது. 'இன்னும் சிறிது நேரத்தில் வீட்டை அடைந்து விடுவோம். மனைவியையும் புதல்வியையும் பார்ப்போம். அவர்களுக்கு ஆசையோடு வாங்கி வந்த துணிமணிகளைக் காண



பிப்போம். அதைப் பார்த்து அவர்கள் பர வசப்படுவார்கள்.'

சாலையின் இரு மருங்கிலும் பரந்து விரிந்து கிடந்த வயலின் பச்சைப் பசிய தோற்றம் அதையடுத்து மேலப்பாளையத்து ஊரின்தோற் றம், கப்பலில் வரும்போது மூன்று மைல் களுக்கு அப்பால் சென்னை நகரம் தெரிவது போலத் தோன்றியது. ஊர் ஓரத்தில் ஓங்கி உயர்ந்திருந்த மினுரா... அதிலே கூடு கட்டி வாழும் மாடப்புறுக் கூட்டம்....

குறிச்சிக்குள் ஜட்கா நுழைந்து மேலப் பாளையத்து எல்லைக்குள் பிரவேசித்தது.

டாக்ஸிகள் வளைய வரும் மேலப்பாளை யத்து ஊருக்குள் நீண்ட நாட்களுக்குப் பிறகு ஜட்கா வரும் அதிசயத்தை அங்குள்ள வாண்டுகள் ஆச்சரியத்தோடு கூடி நின்று வேடிக்கை பார்த்தனர்.

ஜட்கா சப்பாணி லெப்பைத் தெருவில் நுழைந்து விட்டது.

''வீடு எந்தப் பக்கம் எஜமான்?''

''தொங்கல்லே... வயல் பக்கத்திலே...''

தெருவின் ஒரு மருங்கில் நெசவாளர்கள் சாயம் பிடித்த நூலிழைகளுக்குப் பாவு ஆத்திக் கொண்டிருந்தார்கள். திண்ணையிலே காலை மடக்கி உட்கார்ந்திருந்த பெண்கள் கூட்டம் சின்னஞ் சிறிய வட்டிலே உலர்ந்த இலையையும் புகையிலைத் தூளையும் வைத்துத் துரித கதியில் பிடி சுற்றிக் கொண்டிருந்தனர்.




''நம்பர் என் னங்க எஜ மான்?''

''நூத்தி மூப் பது.''

ஜட்கா நின் றது.

ஆவலோடு ஜட்காவிலி ருந்து இறங்கிய ஜலால் மரைக் காயர் வீட் டைப் பார்த்த தும், சில கணம் மலைத்தபடி நின்றார். பெரிய தொரு திண்டுக்கல் பூட்டு வெளியே மாட்டிப் பூட்டப்பட் டிருந்தது.

எதிர் வீட்டிலும் பக் கத்து வீடுகளிலும் வாடகைக்கு இருக்கும் வெளியூர் வாசிகளுக்கு வந்திருப்பது அந்த வீட்டுக்குரியவர் என் பது தெரியாது. அவர் களெல்லாம் இங்கே குடிவந்து சில வருடங் களே ஆகின்ற கார ணத்தால் ஜலாலைத் தெரியவில்லை.



என்றாலும், எதிர்வீட்டிலிருந்து ஒருவன் வந்து பேந்தப் பேந்த விழித்துக் கொண்டிருக் கும் ஜலால் மரைக்காயரை நோக்கி, ''உங்க ளுக்கு யாருங்கோ வேணும்?'' என்று கேட் டான்.

ஜலால் மரைக்காயரும் தம்மை இன்னார் என்று காட்டிக் கொள்ளாமல், ''இந்த ஊட்லே யாரும் இல்லீங்களா?'' என்றார்.

''சமதானியக்காவைக் கேக்குறீங்களா ?... அவுகளுக்குக் காலையிலேதான் வவுத்து நோக் காடு வந்து முனிசிபல் ஆசுபத்திரிக்குப் பேறு காலத்துக்குப் போயிருக்காங்க.... ஆசுபத் திரிக்குப் போனா பார்க்கலாமுங்க.... இந் நேரம் கொழுந்தை பொறந்திருக்கும்.''

ஆயிரம் கிலோமீட்டர் வேகத்தில் இடி யொன்று இறங்கி ஜலால் மரைக்காயரின் தலையில் விழுவது போலிருந்தது, எதிர்வீட்டுக் காரர் கொடுத்த தகவல்.

தம் மனைவி பேறுகாலத்துக்காகப் பிரசவ ஆஸ்பத்திரிக்குச் சென்றிருக்கிறாளா?

அவரால் நம்ப முடியவில்லை. எதிர்வீட்டு ஆசாமி தவறான தகவலைத் தரவில்லை. சரி யாகவே சொல்கிறான். அப்படியானால் சமதானி....... ?

''என்னங்க, அப்படிக் கல்லாட்டம் நின் னுட்டீங்க? சமதானியக்கா உங்களுக்குச் சொந்தமுங்களா? பாவம், ஒதவி ஒத் தாசைக்குக்கூட யாரும் இல்லாம வேறே வழி யின்றி அவுக மகன் மெஹ்ரூதான் கூடப் போவுது..... கண் தெரியாம சமதானியக்கா படுகிற இந்தக் கஷ்டத்திலே.... இப்படிப் பட்ட சோதனையை அல்லா கொடுத்திருக் கிறான்......''

இரண்டாவது தடவை அதிர்ச்சி வசப்பட்டார் ஜலால் மரைக்காயர்.

சமதானிக்குக் கண் தெரியாதா ?

ஜலால் மரைக்காயரின் உள்ளத்திலே சிறுகச் சிறுகச் சுமை ஏறியது. இந்தக் கட்டத்தில் தம்மை இன்னார் என்று அவர் அவனிடம் காட்டிக் கொள்ள விரும்பாமல், அந்த எதிர் வீட்டுக்காரனிடம், ''தம்பீ! நான் ஊருக்குப் புதுசு. எனக்கு முனிசிபல் ஆசுபத்திரி இருக்கிற இடத்தை இந்த ஜட்காவிலே என் கூட வந்து காட்டுகிறியா, செலவுக்கு ஏதும் தருகிறேன்'' என்று மணிபர்ஸைத் திறந்தபடி இளைஞனின் முகத்தை நோக்கினார்.

''இருங்க, சட்டை மாட்டிக்கிட்டு வர்றேன்.''

சமதானியை இரண்டாந்தாரமாகக் கட்டும்போது ஜலால் மரைக்காயரைச் சிலர் கண்டித்தனர், 'உன்னைவிட இருபது வயது குறைந்த சின்னஞ் சிறிசைக் கட்டுகிறாயே' என்று. முதல் தாரம் மட்டும் தலைப் பிரசவத்தில் கண்ணை மூடி இருக்காது போனால் ஊரார் இப்படிக் கூறுவார்களா என்று வருந்தினார். வீட்டிலேயே வேலைக்கு இருந்தவள் வீட்டு நிர்வாகத்தைத் திறம்பட நடத்துவாள் என்றே நண்பர்களின் கண்டிப்பையும் மீறிச் சமதானியைக் கரம் பிடித்தார். அவள் முந்தைய காலத்தை வேலைக்காரித் தொழிலில் கழித்திருந்தாலும், கற்பொழுக்கத்தில் அப்பழுக்கற்றவள்.

ஜுலைதா — முதல் தாரம் இறந்த புதிதில், இளமை வேகத்தில் யாரும் இல்லாத நேரத்தில் சமதானியிடம் தகாத முறையில் ஜலால் மரைக்காயர் நெருங்கியபோது, நெருப்பாகக் கனன்றாள். 'நெருங்கி வந்தால் கூச்சல் போடுவேன், ஊரைக் கூட்டுவேன். உங்கள் மானத்தைக் கப்பலேற்றுவேன்' என்று, எஜமானன்என்றுகூடப்பாராமல் சூளுரைத்தாள்.

அப்படிப்பட்ட சுடு நெருப்பு..... இப்போது ?

''புறப்படலாமுங்களா ?'' எதிர்வீட்டு இளைஞன் உடை மாற்றிக் கொண்டு வந்தான்.

எதிர்வீட்டுக்காரனைத் தம்முடன் ஜலால் மரைக்காயர் அழைத்த காரணம், சமதானியைப் பற்றிய விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்காகத்தான்.

''தம்பீ! உன் சமதானியக்காவுக்குக் கண் தெரியாதா ? எப்போ இருந்து தெரியாது ?''

''அப்போ உங்களுக்கு ஒன்னும் தெரியாதுங்களா ?''

''தெரியாது தம்பீ..... நான் இங்கே வந்து ரொம்பக் காலமாகுது...அதனாலே கொஞ்சம் விவரமாய்ச் சொல்லேன்.......''

''அது பெரிய கண்ணராவிங்க.....அந்த அக்காளோட புருஷன்காரன் அந்தமானிலே பாக்குக் கொள்முதல் பண்ணப் போறச்சே படகு கவுந்து மௌத்தாகிப் போனானுங்க..... பாவம், அந்த அக்கா ஏழு நாளா சாப்பிடாம அழுதுக்கிட்டு இருந்துது.... அது கொழந்தே மெஹ்ரு வதவதன்னு அகத்தி மரமாட்டம் வளர்ந்துட்டுதுக..... பீடி சுத்திப் பீடி சுத்தித் தினசரி வவுத்தைக் கழுவத்தாங்க அதுக சம்பாத்தியம் சரியாக இருந்ததுக......''

''அவ புருஷன்காரன் இறந்துட்டதா எப்படித் தெரிஞ்சுது ?''

''இந்த ஊரு ஆட்கள் அந்தமான்லேயிருந்து வந்தப்போ சொன்னாங்க.... பேப்பரிலேயும் அந்தச் செய்தி வந்து இருந்துச்சே.... !''

அந்தமான் அருகில் குட்டித் தீவு ஒன்றில் தென்னை மரத்தில் ஏறி இளநீர் பறித்துக் கொண்டிருக்கும்போது நழுவிக் கீழே விழுந்து இடுப்பு எலும்பு இலேசாக முறிந்து ஒரு வருட காலம் படுத்த படுக்கையாக இருந்தது, பிறகு சுகம் பெற்றது. இதை ஊருக்குத் தெரிவித்தால் சமதானி அதிர்ச்சி வசப்பட்டுவிடுவாள் என்ற எண்ணத்தில் கடைசிவரையில் ஊருக்குத் தெரிவிக்காமலும், இந்த இடைப்பட்ட காலத்தில் ஏற்பட்ட கடன்களை ஒரே மூச்சில் அடைத்துவிட்டுப் பின்னர் ஒரு கணிசமான தொகையைச் சம்பாதித்துக் கொண்டு ஊருக்குப் போக வேண்டும் என்று எண்ணியிருந்து செயல்பட்டதும் எத்தகைய விபரீதத்தை வளர்த்து விட்டன... தென்னை மரத்திலிருந்து விழுந்த நேரத்தில் தாம் பாக்குக் கொள்முதலுக்கு வந்த படகும் திரும்புகிற வழியில் மூழ்கிவிட்டதாக அந்தத் தீவில் உள்ளவர்கள் பேசிக் கொண்டார்கள்.

இந்தத் தடவை அந்தமான் புறப்படும் போது சமதானி சொன்னாள்... ''நீங்கள் மாதா மாதம் பணம் அனுப்ப வேண்டாம். நாங்கள் இங்கே பீடி சுத்தி வயிற்றைக் கழுவிக் கொள்கிறோம். அதனால் அந்தப் பணத்தை மொத்தமா சேமித்து வாருங்கள்; மெஹ்ருனும் அதற்குள் பெரிய மனுஷியாகிவிடுவாள். நீங்கள் கொண்டு வருகிற பணத்தை வைத்து மகளின் கல்யாணத்தை முடித்து விடலாம். மேலும் கடிதம்கூட அடிக்கடி எழுத வேண்டாம். நம்ம ஊர் ஆட்கள் அடிக்கடி வருவதால், அவர்களிடம் உங்கள் க்ஷேம லாபங்களை விசாரித்துக் கொள்கிறேன். நீங்களும் இங்கிருந்து வருபவர்களிடம் எங்கள் சுக செய்தியை 'விசாரித்துக் கொள்ளுங்கள்.''

இதனால் அல்லவா, கடிதம்கூட எழுதாமல் இருந்துவிட்டோம். இருந்தாலும், அத்தியடி தெரு ஆஷிக்மீரானிடம் சமதானிக்கு, சுகம் பெற்றுத் திரும்பியதும் செய்தி சொல்லிவிட்டோமே, அவன் சொல்லவில்லையா ?

''.ம்... அப்புறம் ?''

''ஒரு நாள், ரொம்ப காலமா கல்கத்தா, போபால், மஹாராஷ்டிரம் போன்ற இடங்களில் பள்ளப்பட்டிக்காரங்க வட்டிக் கடையிலே வேலைக்கிருந்து கணிசமான தொகையைச் சுருட்டிக் கொண்டு ஊர்ப் பக்கம் வந்த அப்துல் ஹக்—சமதானி அக்காவுக்குத் தூரத்து உறவாம். அக்காவைப் பார்த்ததும் 'கோ'ன்னு அழுதுவிட்டான். 'ஒனக்கா சமதானி இந்தக் கதி'ன்னு அழுதான். அவன் தாய் தந்தையெல்லாம் கோனக் காடு புல் முளைச்சுப் போச்சி.... அதனாலே இங்கேயே அக்காளோடு தங்கினான். அப்படியே அக்கா மனசை மாத்தி அவனைக் கல்யாணம் பண்ணி ஆறு மாசம் கழிச்சி மெஹ்ருக்கும் கருங்குளத்துலே மாப்பிள்ளை பார்த்துத் தாலி கட்டி வைச்சான். பாருங்க, மெஹ்ரு கல்யாணம் முடிஞ்ச மறு வாரம், பள்ளப்பட்டிக்காரங்க எப்படியோ துப்பு வச்சி போலீஸ் மூலமா அப்துல்ஹக்கைப் புடிச்சிட்டுப் போயிட்டாக.. அப்போ சமதானியக்கா ரெண்டு மாசமா முழுகாம இருந்ததுன்னு பேசிக்கிட்டாங்க...

பாருங்க, ரெண்டு மாசத்துக்கு முன்னாடி கண்ணை உறுத்துதுன்னு யாரோ ஓர் அரை வேக்காடு ஓமியோபதி டாக்டர்கிட்டே கண்ணைக் காட்டித் தண்ணியா எதையோ கண்ணிலே ஊத்தினாங்களாம், ராத்திரி படுத்துட்டு விடிஞ்ச பொறவு பார்த்தா கண்ணே தெரியல்லேங்கறாங்க..... அதுக்குப் பொறவு எங்கெங்கெல்லாமோ பக்கத்து ஊட்டுக்காரங்க கூட்டிக்கிட்டுப் போனாங்க.... ஒண்ணும் பிரயோசனமில்லே... இதாங்க ஆசுபத்திரி! இங்கேதான் எறங்கணும்!''

ஜட்கா நின்றது.

''ஏங்க அழறீங்க?''

ஜலால் மரைக்காயர் கைத் துண்டால் கண்களைத் துடைத்தபடி சொன்னார்: ''கண்ணிலே ஏதோ தூசி விழுந்துட்டதப்பா!.... சரி, இந்தா, இவ்வளவு நேரம் இருந்து பேசிக்கிட்டு வந்ததற்காக இதை வைத்துக் கொள்'' என்று பத்து ரூபாய் நோட்டை நீட்டினார்.

அதை வாங்கிக் கொண்ட எதிர்வீட்டுக்காரன், நன்றிப்பெருக்கோடு விடை பெற்றான்.

ஆஸ்பத்திரி வராந்தாவில் இளம் பெண்ணொருத்தி துள்ளித் திமிறி அழுதாள். அவளை நாலைந்து பெண்கள் சமாதானப் படுத்தினர்.

''எனக்கு இருந்த ஒரே புடிப்பும் போயிட்டுதே! அம்மா, ஒங்களை இனிமே எப்போம்மா பார்ப்பேன்?''

''இந்தா மெஹர், அழாதேம்மா! உங்க வாப்பா அந்தமான்லே இறந்தப்போகூட இப்பிடி நீ அழல்லேயே... இப்போ இப்பிடி அழலாமா? அம்மா விதி முடிஞ்சு போச்சு.''

'சமதானி!' ஜலால் மரைக்காயரின் இதயம் ஓலமிட்டு ஒப்பாரி வைத்தது.

''வண்டியை விடப்பா!''

ஜட்கா நகர்ந்தது.

''அதோ, அந்தப் பள்ளிவாசல் பக்கமாக ஜட்காவை நிறுத்திக் கொள். இன்னிக்கு முழுதும் நீ எங்கேயும் போகக் கூடாது!'' என்றார் ஜலால் மரைக்காயர்.

''சரிங்க!''

''உனக்குப் புள்ளெகுட்டிங்க இருக்காப்பா?''

''என்ன அப்படிக் கேட்டுட்டீங்க.... வயசுக்கு வந்த பெண் மூணு இருக்குதுங்க.... சந்நியாசி கிராமத்திலேதாங்க வீடு. அதுங்க வீட்டிலே குந்த வச்ச காலத்திலே நான் கல்யாணம் பண்ணிக் கொடுத்திருந்தா....இதுவரை பேரன் பேத்திகளை நான் பார்த்திருக்கணும்.... ஏதோ எங்க பாட்டன் வச்ச சொத்து இந்த ஜட்கா.... அரை வயிறும் குறை வயிறுமா காலத்தை ஓட்டுறோம்....''

''கவலைப்படாதே!' ஆண்டவன் இருக்கான். அவன் தரணும்னு நினைத்தால் யார் தடுத்தாலும் நிற்காது!'' என்ற ஜலால் மரைக்காயர் தூரத்தே ஆஷிக்மீரான் வருவதைக் கண்டு, ''வண்டியைக் கொஞ்சம் நிறுத்து.'' என்று ஜட்காவாலாவுக்குக் கட்டளை இட்டார்.

ஆஷிக் மீரான்!

''மரைக்காயரா..... இன்னிக்குத்தான் வர்றீங்களா....? நான் நீங்க சொல்லிவிட்ட சேதியைச் சொல்ல வந்தேன். அன்னிக்குத்தான்.... கல்யாணம் நடந்தது... இங்கே



## நமது பாரதம்!

★ ஆறு கோடி ரூபாய் நஷ்டம் அடைந்துள்ளது அரசாங்க நிறுவனமான பாரத் ஹெவி பிளேட் அண்டு வெஸல்ஸ் (கப்பல் கட்டும் தளம்). இந்த நிறுவனத்தைச் சேர்ந்த மூவாயிரம் தொழிலாளர்கள் கடந்த பல நாட்களாக வேலைநிறுத்தம் செய்து வருகிறார்கள். கான்டீனில் விற்கப்படும் தின்பண்டங்களின் விலைகள் குறைக்கப்பட வேண்டும் என்பது இவர்களின் நிபந்தனை. நிர்வாகம் வழக்கைத் தொழில் கோர்ட்டுக்குக் கொண்டு போயிருக்கிறது.

★ ''நான் மந்திரிகளையோ, ராஷ்டிரபதியையோ, கவர்னர்களையோ பார்க்கச் சென்றால், அமெரிக்காவிலிருக்கும் தங்கள் புதல்வர்கள், புதல்விகள், மாப்பிள்ளைகளுக்கு அமெரிக்கா எவ்வளவு பிடித்திருக்கிறது என்று புகழ்ந்து பேசுகிறார்கள். அடுத்த நாள் பத்திரிகைகளில் இதே ஆசாமிகள் அமெரிக்காவைத் தாக்கிப் பேசுவதையும் பார்க்கிறேன்.''

— அமெரிக்கத் தூதர், வில்லியம் ஸாக்ஸ்பீ.

★ அகில உலகத்திலும் உணவுப் பற்றாக்குறை எவ்வளவு உண்டோ, அந்த அளவுக்கு இந்தியாவில் எலிகள், பறவைகள், பூச்சிகள், ஈரம் ஆகியவற்றால் ஒவ்வோர் ஆண்டும் உணவு தான்யம் சேதமடைகிறது என்று ஓர் ஐ. நா. அறிக்கை கூறுகிறது.

-- ஹிந்துஸ்தான் டைம்ஸ்

விசாரித்ததில், நீங்கள் இறந்துவிட்டதாக முடிவு கட்டி....'' ஆஷிக்மீரான் முடிக்கவில்லை.

''சரி, வண்டியை ஓட்டு.....''

ஜட்கா நகர்ந்தது.

''சந்நியாசி கிராமத்துக்கே விடு, வண்டியை!''

''ஏங்க?''

''உன் வீட்டுக்குத்தான். நான் உங்கள் வீட்டுக்கு இன்றைக்கு விருந்தாளி.''

ஜட்காவாலா ரஹ்மதுல்லா புரியாமல் விழித்தான்.

''இந்த லக்கேஜ்களை வீட்டுக்குள் எடுத்து வை. இதுதான் உன் சம்சாரமும், பிள்ளைகளுமா?''

''ஆமாங்க!''

பெட்டியைத் திறந்த ஜலால் மரைக்காயர், புத்தம் புதிய சேலைகளையும், இதர துணிமணிகளையும் எடுத்து, ''இந்தா, இவைகளை உன் பெண்களுக்குக் கொடு.... இந்தா, இதிலே பணம் இருக்கு...... இந்த ஜட்காவை வித்துட்டு ஒரு பெட்டிக் கடை வைத்து முன்னேறு....'' என்றார்.

''எஜமான்!''

''ஆண்டவன்தானப்பா எல்லோருக்கும் எஜமான். உன் குமர்வகைக்கு நான் பிறகு உதவுகிறேன். இப்போ மேலப்பாளையத்துலே கொஞ்சம் வேலை இருக்கு..... நான் அப்புறமா வர்றேன்!''

சமதானியின் இறுதிச் சடங்கில் கலந்து கொள்ள, யாரோ ஒரு வெளியூர்வாசி போல் மேலப்பாளையம் நோக்கி நடையைக் கட்டினார் ஜலால் மரைக்காயர்.

# கொசுக்கள் அதிகமாகி வருகின்றன...

(டிடிடிக்கு எதிர்ப்பு பெறுகின்றன)

## ஏன் துன்பப்பட வேண்டும்?

### உபயோகிப்பீர்

# ரிப்லெக்ஸ்

ரிப்லெக்ஸில் கலந்துள்ள விசேஷப் பொருட்கள் கொசுக்களை விரட்டியடிக்கின்றன! மனத்துக்கினிய நறுமணம் வாய்ந்ததும், வழவழப்பானதுமான, க்ரீம் தன்மையுடைய ரிப்லெக்ஸ் உங்கள் சருமத்திலிருந்து உடனே மறைகிறது. கொசுக்கள் மற்றும் பூச்சிகள் கடியிலிருந்து பலமணி நேரங்கள் உங்களைக் காப்பாற்றுகிறது.




**இலவசம்!**

ஒவ்வொரு ட்யூப் ரிப்லெக்ஸுடனும் வண்ண வண்ண துணி உலர்த்த உதவும் க்ளோ-பெக்ஸ்

ராலிஸ் இந்தியா தயாரிப்பு. 

RADEUS R-R-1




8

**க**பூரின் சிந்தனை ஓடியது.

இன்று காலை தம் மீதிருந்த கோபத்தையெல்லாம் மோகினி விஜயாவின் மீது காட்டியிருக்க வேண்டும். எப்படிப் பேசியிருப்பாள் என்பதை ஊகிக்க முடியும்... ராகேஷ் இவளை நிச்சயமாக விரும்புகிறானா? அல்லது இதுவரை பேசாமல் இருந்தவனுக்கு, உலகத்தைத் திடீரென்று கவனிக்கத் தொடங்கியதால் ஏற்பட்ட தாற்காலிகச் சபலமா? — இந்தப் பெண்ணும் அவனை விரும்புகிறாளோ? இது பிரச்னைக்குரிய விஷயம்.... அப்புறம் யோசிக்கலாம்....

''நான் ஏதாவது தப்பாகச் சொல்லியிருந்தால் மன்னித்துக் கொள்ளுங்கள்'' என்றாள் விஜயா.

''நீ என் ஆஃபீஸிலேயே வேலை செய். ரிஸப்ஷனில் போய் உட்கார். என்ன வேலை என்று கொஞ்ச நேரம் கழித்துச் சொல்லுகிறேன்'' என்றார் கபூர்.

நிமிஷங்கள் பல சென்றன. கால் மணி, அரை மணி, அட கடவுளே! ஒரு மணி நேரத்துக்கு மேலாகிறது. அவளைக் கபூர் இன்னும் கூப்பிடவில்லை. போய் விடலாமா? மோகினி வேலையிலிருந்து நீக்கிய பிறகு, அவளுடைய கணவனிடம் போய், 'எனக்கு வேறே வேலை கொடு...' என்று கேட்டால்? — இதில் என்ன தப்பு? தனக்கு வேலை வேண்டும் என்பதுதான் முக்கியம். அவரும் தருவதாக வாக்களித்திருக்கிறார். ஒரு வேளை, மோகினிக்கு ஃபோன் பண்ணி, என்ன நடந்தது என்று கேட்டிருப்பாரோ? — கேட்கட்டுமே, தான் பொய் ஒன்றும் சொல்லிவிடவில்லையே?

''மிஸ் விஜயா..... ''

அவள் நினைவுகளினின்றும் விடுபட்டு ஏறிட்டு நோக்கினாள். மணி.

'' உங்களுக்கு 'ஸ்டெனோகிராஃபி' தெரியுமா என்று மிஸ்டர் கபூர் கேட்கிறார்....'' என்றான் மணி.

''தெரியும்.''

''நல்லது... உள்ளே வாருங்கள், கூப்பிடுகிறார்.''

அவள் உள்ளே போன போது, அவர் வெளியே போவதற்கு ஆயத்தமாய் நின்று கொண்டிருந்தார்.

''ஸ்டெனோகிராஃபி' தெரியுமாம்.... '' என்றான் மணி.

''ஓ. கே..... மணி கொஞ்ச நாட்கள் லீவில் போகிறான். அந்த இடத்தில் நீ வேலை செய்கிறாயா ?'' என்று கேட்டார் கபூர்.

''நிரந்தர வேலை இல்லையா?''

''இப்பொழுது வேலைக்குச் சேர்ந்துவிடு. அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்.... சரி.... இந்த 'டிக்டேஷனை' எடுத்துக் கொண்டு, 'டைப்' செய்து மணியிடம் காண்பி. நான் வெளியே போய்க் கொண்டிருக்கிறேன்.... மணி! உனக்குத் திருப்தியாக இருந்தால், நியமனக் கடிதத்தை இன்றே இவளிடம் கொடுத்துவிடு. நீ ஊருக்குப் போய்..... என்ன கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாயா ?....''

''ஆமாம்....'' என்று புன்னகையுடன் தலையசைத்தான் மணி.

அவர் அவனைப் பரிதாபமாகப் பார்த்தார்.

'' இன்னும் நிச்சயமாகவில்லை... போய்ப் பெண்ணைப் பார்த்த பிறகு.....''

''இன்னும் நிச்சயமாகவில்லையா ? அப்படியானால் நம்பிக்கைக்கு இடம் இருக்கிறது என்கிறாயா ?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் கபூர்.

மணி பேசாமல் இருந்தான்.

''உட்கார், நான் சொல்வதை எழுது....'' என்றார் கபூர் விஜயாவிடம்.

விஜயா மணியைப் பார்த்தாள்.

''ஓ...! பென்ஸில் பேப்பர், எல்லாம் வேணுமல்லவா ? மணி உன் நோட்டுப் புத்தகத்தையும் பென்ஸிலையும் கொடு.''

அவன் அவற்றைக் கொண்டு வர வெளியே போனான்.

''மோகினி டெலிஃபோன் செய்தாளானால் ஆணுக்குப் பதிலாகப் பெண் குரல் கேட்டு, நீ யாரென்று கேட்கலாம். நீ யாரென்று சொல்லிக் கொள்வதில் உனக்கு ஆட்சேபனை இல்லையே ?'' என்று கேட்டார் கபூர்.

''எனக்கு இல்லை....'' என்று இழுத்தாள் விஜயா.

''எனக்கும் கிடையாது.... அப்புறம்..... ராகேஷ் உன்னிடம் பேசியவற்றையெல்லாம் மறந்துவிடு... இதுதான் உனக்கு நல்லது... ஓர் ஆணும் பெண்ணும் திருமணம் செய்து கொள்ளுவதற்கு முன்னால் இதை முக்கியமாகக் கவனிக்க வேண்டும், அவர்களுக்குள்




மிகுந்த பொருளாதார ஏற்றத் தாழ்வு இருக்கக் கூடாது.... பாரம்பரியமாக வருகின்ற வெவ்வேறு தரத்துக்குச் சமூகப் பிரக்ஞை உள்ளவர்களாக அவர்கள் இருந்துவிட்டால், திருமண வாழ்க்கை நரகமாவதற்கு வேறு காரணமே வேண்டாம்... நான் பணத்திமிரில் பேசுகிறேன் என்று நினைக்காதே..... உன் நன்மைக்காகச் சொல்லுகிறேன்.''

மணி உள்ளே வந்தான்.

''எஸ்... டேக் டவுன்.''

ஏதோ ஒரு கம்பெனியின் நிர்வாகத் தலைவருக்கு அலுவலகச் செலவுகளைக் குறைப்பது எப்படி என்று ஆலோசனை கூறும் கடிதம். அவர் தங்கு தடையில்லாமல், புள்ளி விவரங்களுடன் சொல்லிக் கொண்டே போனார். முதலில் கொஞ்சம் எழுதுவதற்கு அவள் கஷ்டப்பட்டாலும், போகப் போக அவளுக்குச் சுலபமாக இருந்தது.

''கடிதத்தைப் படி'' என்றார் கபூர்.

அவள் படித்தாள்.

''ஓ.கே..... டைப் செய்து மணியிடம் காட்டு....''

அவர் அறையைவிட்டு வெளியே சென்றார்.

மணி அவளை ஒரு பெரிய ஹாலுக்கு அழைத்துச் சென்றான். அங்கே ஐந்தாறு மேஜைகள் போடப்பட்டிருந்தன. கபூர் அறையை ஒட்டிப் போட்டிருந்த மேஜையில் 'டைப் ரைட்டர்' இருந்தது.

'' இதுதான் என் இடம்.... இந்த மெஷினில் அடிக்கிறீங்களா?'' என்று கேட்டான் மணி.

அங்கு உட்கார்ந்திருந்த அனைவரும் அவளைப் பார்த்தார்கள்.

விஜயாவுக்குக் கொஞ்சம் கூச்சமாக இருந்தது.

''பரவாயில்லை, உட்காருங்கள்'' என்றான் மணி.

அவள் 'டைப்' அடிக்கத் தொடங்கியதும், மணி மேஜை மேஜையாகச் சென்று மற்றவர்களுடன் பேசிக் கொண்டிருந்தான். தன்னைப் பற்றித்தான் இருக்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றிற்று.

திடீரென்று அவர்கள் எல்லோரும் பலமாகச் சிரித்தார்கள்.

அவள் அவர்களை நிமிர்ந்து பார்த்தாள்.

'' ஐ ஆம் ஸாரி.... நான் திருமணம் செய்து கொள்ளப் போவதைப் பற்றிக் கலாட்டா செய்கிறார்கள்....'' என்றான் மணி. அவன் விளக்கத்தை ஏற்றுக் கொண்டுதான் ஆக வேண்டும். வேறு வழியில்லை. அவள் புன்னகை செய்தாள்.

அவள் 'டைப்' செய்து முடித்ததும் மணியைப் பார்த்தாள். அவன் மிக சுவாரசியமாக ஒரு நரைத்த தலைக்காரருடன் பேசிக் கொண்டிருந்தான். அவனை அவள் கூப்பிட விரும்பவில்லை...... மெஷினை இலேசாக ஆள்காட்டி விரலினால் தட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

'' அடிச்சாச்சா ?''

அவள் தலை அசைத்தாள்.

அவன் அவளிடம் வந்து அவள் டைப் செய்திருந்த கடிதத்தைப் படித்துப் பார்த்தான்.



அதில் ஒரே ஓர் இடத்தில் ரப்பரினால் அழித்து மறுபடியும் சரியாக 'டைப்' அடித்திருந்தாள்.

''இரேஸர் இருந்தால் மிஸ்டர் கபூருக்குப் பிடிக்காது... மற்றப்படி... ஃபஸ்ட் கிளாஸ்.. கன்கிராஜுலேஷன்ஸ்.''

'' எதுக்கு ?''

'' நீங்கள் வேலையில் சேர்ந்துவிட்டீர்கள்... நியமனக் கடிதத்தை நான் அடிக்கலாமா அல்லது நீங்களே அடித்துக் கொள்கிறீர்களா ?''

'' நீங்களே அடியுங்கள்'' என்று சொல்லிக் கொண்டே அவள் அந்த நாற்காலியிலிருந்து எழுந்தாள்.

''சம்பளத்தைப் பற்றி உங்களிடம் ஏதாவது சொன்னாரா ?''

''இல்லையே......''

''அப்படியானால்.... அவர் வந்த பிறகு பார்த்துக் கொள்ளலாமா ?''

'' உங்கள் இஷ்டம்.''

'' நீங்க யாருன்னு எல்லாருக்கும் சொல்லட்டுமா ?'' என்று கேட்டான் மணி.

'' நான் முதல்லே எங்கே இருந்தேன்னு சொல்ல வேணும்.... புதுசா வேலையிலே சேர்ந்திருக்கேன்னு, வேணும்னு சொல்லுங்க......''

'' நோ... நோ... அதைப் பற்றியெல்லாம் சொல்ல மாட்டேன்.... வாங்க இப்படி...''

அவன் அவளை எல்லோருக்கும் அறிமுகம் செய்து வைத்தான்.

விஜயா எல்லாருக்கும் கையைக் கூப்பினாள்.,

அப்பொழுது மணியின் மேஜையிலிருந்த டெலிஃபோன் ஒலித்தது. அவன் ஃபோனை எடுத்தான்.

'' ஓ ! நமஸ்தேஜீ... மிஸ்டர் கபூர் வெளியிலே இப்பொழுதுதான் போனார்.... ஜஸ்ட்... ஜஸ்ட்... ஜஸ்ட் ஒன் மினிட்'' என்று சொல்லிக் கொண்டே ஃபோன் 'வாயை' மூடிவிட்டு, அவன் விஜயாவை அருகில் வரும்படியாக அழைத்தான்.

அவன் கேட்டான்:''ஏன்,என்ன வேணும்?''

''உங்க பெட்டி படுக்கை எல்லாத்தையும் அங்கேயே வச்சுட்டு வந்துட்டீங்கன்னு மிஸஸ் கபூர் சொல்றாங்க..... அதை உங்க வீட்டுக்கு அனுப்பணுமாம்... உங்க விலாசம் மறந்து போச்சாம்..... மிஸ்டர் கபூரோட சிநேகிதர் மூலமா அவங்க வீட்டுக்கு வேலைக்குப் போனீங்க? அவரை விசாரிச்சு விலாசம் சொல்லச் சொல்றாங்க... என்ன சொல்றது?''

விஜயா அவன் அருகில் சென்றாள். ''ஃபோனைக் கொடுங்க, நான் பேசறேன்.''

விஜயா தன் வீட்டு முகவரியைச் சொன்னாள்.

''யார் பேசுகிறார்கள் ?''

''விஜயா...''

''எங்கிருந்து பேசுகிறாய்?''

விஜயா, கபூரின் அலுவலக முகவரியைச் சொன்னாள்.

''நீ எதற்காக அங்கு போனாய்?''

''இங்கு வேலையில் சேர்ந்திருக்கிறேன்.''

''என்ன?'' இதைத் தொடர்ந்து மோகினி சில விநாடிகள் மௌனமாக இருப்பதை உணர்ந்த விஜயா, ஒரு வேளை, அவளுக்கு

மாரடைப்பு வந்துவிட்டதோ என்று பயந்தான். நல்ல வேளை அப்படியொன்றும் நேரவில்லை. அதிர்ச்சியைச் சமாளித்துக் கொண்டு அவள் சீறும் சத்தம் உடனேயே கேட்டது.

'' என்ன தைரியம் இருந்தால், நான் உன்னை வீட்டை விட்டு விரட்டிய பிறகு, அவருடைய ஆஃபீஸிலேயே வேலை செய்யப் போவாய் ? — என்ன பொய் சொன்னாய், மரியாதையாகச் சொல்லிவிடு.''

''பொய் சொல்லவில்லை.... உண்மையைத் தான் சொன்னேன்.''

''பிள்ளையை மயக்கியது போதாதென்று அப்பனை வேறு மயக்க ஆரம்பித்துவிட்டாயா?''

விஜயா ஃபோனைக் கீழே வைத்துவிட்டாள். அவள் தன் கோபத்தை அப்படிக் காட்டியிருக்க வேண்டாம் என்று அவளுக்குத் தோன்றிற்று. எல்லோரும் அவளைப் பார்த்தார்கள்.

''மிஸஸ் கபூர் ஒருமாதிரி! அவங்களோட சண்டை போட்டுக்கிட்டு வந்தீங்களா?''

விஜயா 'ஆமாம்' என்பதற்கு அடையாளமாகத் தலை அசைத்தாள்.

''நீங்கதான் இத்தனை மாசமாவது அவங்க வீட்டிலே வேலை செஞ்சீங்க... மத்தபடி வேலை செய்ய வர்றவங்க யாரும் ஒரு மாசத்துக்கு மேலே தங்கினது இல்லே....''

'' நானும் கேள்விப்பட்டேன்'' என்றாள் விஜயா.

''டீ சாப்பிடப் போகலாமா ?'' என்று கேட்டான் மணி. ''இந்தக் கட்டடத்துக்கு எதிர்ச்சாரியிலே ஒரு கடை இருக்கு. சின்னக் கடைதான், என்ன கூட்டங்கிறீங்க? ஃபஸ்ட் கிளாஸ் டீ, ரஸ மலாய், சமோஸா எல்லாம் தரான்.... பைதிவே, உங்களை டிபன் சாப்பிடக் கூப்பிடறேனே, நீங்க 'லஞ்ச்' இன்னும் சாப்பிடலியே? இங்கே வந்து ரொம்ப நேரமாகிறது போலிருக்கே.''

'' வாங்க, பரவாயில்லே, டிபன் சாப்பிடலாம் '' என்றாள் விஜயா.

''ரமேஷ்... மாலிக் கடைக்கு டிபன் சாப்பிடப் போறோம்..... கொஞ்சம் ஃபோனைக் கவனி.......''

''எனக்கும் ரஸமலாய் வாங்கிக் கொண்டு வா....''

மணி பதில் சொல்லாமல் புன்னகை செய்தான்.

மாலிக் கடையில் நல்ல கூட்டம். ''நீங்க இப்படி நில்லுங்க... நான் உள்ளே போய் வாங்கிக்கிட்டு வரேன்'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே போனான் மணி.

விஜயா கடை வாசலில் ஓரமாக நின்று கொண்டிருந்தாள். அவளுக்கு நல்ல பசி. மணி கூப்பிட்டதும், ஒப்புக் கொண்டுவிட்டதற்கு இதுதான் காரணம். மணியுடன் ஏற்கனவே அவள் சில சமயங்களில் ஃபோனில் பேசியிருப்பதால், அவனுடன் பல நாட்கள் அறிமுகம் இருப்பது போலவே அவளுக்குப் பட்டது. மிகவும் நல்ல பையனாகத் தெரிகிறான்.

மோகினி இப்பொழுது என்ன செய்யப் போகிறாள்? — நிச்சயம் கபூருடன் சண்டை பிடிக்கப் போகிறாள்..... அவர்தான் பயப்படப் போவதில்லை என்று சொல்லியிருக்கிறார். ஆனால் அவரால் தாக்குப் பிடிக்க முடியுமா ? நேற்றைய அனுபவத்துக்குப் பிறகு அவருக்குத் தைரியம் ஏற்பட்டிருப்பது போல் தோன்றுகிறது..... ரத்தன்லால் சொன்னதை அவள் மீண்டும் நினைவுபடுத்திக் கொண்டாள் : 'இனி கபூர் உங்களைக் கண்டு பயப்படப் போவதில்லை.' ஆனால் தனக்கு அவர் வேலை அளித்ததற்கு நன்றிக் கடனாக, ராகேஷைப் பற்றி மறந்துவிட வேண்டும் என்று சொல்லியிருக்கிறார் ! — அவர் இதற்காகக் கூறிய காரணம், அவளுக்கு நியாயமாகத்தான் பட்டது. அவர் அனுபவபூர்வமாக உணர்ந்த உண்மை !

ராகேஷ் தன்னிடம் உணர்ச்சிவயப்பட்ட நிலையில், நேர்மையான ஈடுபாடு கொண்டிருக்கிறான் என்பதில் சந்தேகமில்லை. 'என்னை நீ இன்னுமா புரிந்து கொள்ளவில்லை? நீ எங்கு போனாலும் நான் உன்னுடன் வருவேன்' என்று அவன் அழகாக் குறையாகச் சொன்னது அவள் ஞாபகத்துக்கு வந்தது. அவன் ஆண்; பணம் உள்ளவன். அவனால் தன்னை எந்தவிதமான பிரச்னைகளுடன் பிணைத்துக் கொள்ளாமல், ஒரு சுதந்திர நிலையில் இயங்க முடியும்... ஆனால் இது தனக்குச் சாத்தியமா?

''ஹலோ.''

அவள் திரும்பிப் பார்த்தாள். ராகேஷ் ! இவன் எப்படி இங்கு வந்தான் ?

'' என்ன ஆச்சரியமாக இருக்கிறதா ?''

விஜயா பதில் சொல்லவில்லை. ஒரு திடுக்கிட்ட நிலையில் அவனை உற்றுப் பார்த்துக் கொண்டே இருந்தாள். இவன் இப்பொழுது தன்னைப் பார்க்க வந்திருக்கிறான் என்பது தனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது என்பதை மறுக்க முடியாது. ஆனால்... இது தொடரக் கூடாது. அப்படியிருந்தால்தான் இது தனக்கும் நல்லது. கபூருக்கும் நல்லது. வேலை கொடுத்திருக்கும் அவரை ஒரு சிக்கலுக்கு உள்ளாக்கக் கூடாது.....

''அம்மா உன்னுடன் பேசியபோது நான் ஹாலில்தான் இருந்தேன்.... நீ எங்கிருக்கிறாய் என்று தெரிந்தது. ஆபீஸில் போய் விசாரித்தபோது, மணியுடன் இங்கு டிபன் சாப்பிட வந்திருப்பதாகச் சொன்னார்கள்.''

''மிஸ்டர் ராகேஷ், நம்முடைய நட்பு சாத்தியமாக இருக்கும் என்று நான் நம்பவில்லை. மிஸ்டர் கபூர் இப்பொழுது எனக்கு அவர் ஆபீஸிலேயே வேலை தந்திருக்கிறார். அவரும் இந்த நட்பை விரும்பவில்லை என்றுதான் தோன்றுகிறது.''

''மிஸ்டர் கபூரைப் பற்றியோ அல்லது அவர் உனக்குக் கொடுத்திருக்கும் வேலையைப் பற்றியோ நான் கவலைப்படவில்லை '' என்றான் ராகேஷ்.

'' நான் கவலைப்பட்டாக வேண்டும் என்பதாவது உங்களுக்குப் புரிகிறதல்லவா ?''

''அது உனக்கு என்னிடம் எத்தனை ஈடுபாடு இருக்கிறது என்பதைப் பொறுத்த விஷயம்.''

''கஷ்டப்படும் என் குடும்பத்தை உதாசீனம் பண்ணக்கூடிய அளவுக்கு ஈடுபாடு இருக்க முடியாது என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும்.''

'' 'உன் குடும்பத்தை உதாசீனம் செய்' என்று சொல்லும் அளவுக்குப் பணம் என்னைக் கெடுத்துவிடவில்லை'' என்றான் ராகேஷ்.

'' என்னைக் கெடுக்காது என்பது என்ன நிச்சயம் ?''

# தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கி யின் ரொக்க சர்ட்டிபிகேட்டுகளின் (CASH CERTIFICATES) மூலம் உங்களுடைய முதலீடுகளுக்கு 17.75% வரை வட்டி பெறுங்கள்



| முதலில் செலுத்த வேண்டிய தொகை | ரூ 100/- | ரூ 250/- | ரூ 500/- | ரூ 1000/- |
|---|---|---|---|---|
| உரிய காலத்திற்குப் பிறகு பெறப் போகும் தொகை | ரூ | ரூ | ரூ | ரூ |
| 36 மாதங்களுக்குப் பிறகு | 131.80 | 329.50 | 659.00 | 1318.00 |
| 48 ,, ,, | 144.60 | 361.50 | 723.00 | 1446.00 |
| 60 ,, ,, | 158.50 | 396.25 | 792.50 | 1585.00 |
| 61 ,, ,, | 168.00 | 420.00 | 840.00 | 1680.00 |
| 72 ,, ,, | 184.50 | 461.25 | 922.50 | 1845.00 |
| 84 ,, ,, | 204.30 | 510.75 | 1021.50 | 2043.00 |
| 96 ,, ,, | 226.30 | 565.75 | 1131.50 | 2263.00 |
| 108 ,, ,, | 250.60 | 626.50 | 1253.00 | 2506.00 |
| 120 ,, ,, | 277.50 | 693.75 | 1387.50 | 2775.00 |

சிறு முதலீடு செய்வோர் தேவைக்கேற்ற எமது திட்டங்கள் :

| உரிய காலத்திற்குப் பிறகு பெறப் போகும் தொகை | ரூ 25/- | ரூ 50/- | ரூ 100/- | ரூ 500/- | ரூ 1000/- |
|---|---|---|---|---|---|
| முதலில் செலுத்த வேண்டிய தொகை | ரூ | ரூ | ரூ | ரூ | ரூ |
| 36 மாதங்களில் முடியும் டெபாசிட்டுகள் | 18.97 | 37.94 | 75.88 | 379.40 | 758.80 |
| 48 ,, ,, | 17.29 | 34.58 | 69.16 | 345.80 | 691.60 |
| 60 ,, ,, | 15.77 | 31.54 | 63.08 | 315.40 | 630.80 |




முழு விவரங்களுக்கு எங்களை அல்லது உங்கள் அருகாமையிலுள்ள எங்கள் கிளைகளை அணுகவும்

**தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்**

379, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை-600001

தந்தி : "URBANK" போன் : 20367 (3லைன்கள்) டெலக்ஸ் : MS 7225

TNSC-124/79

''நான் மிஸ்டர் கபூரின் மகனாக உன்னை நாடவில்லை. வெறும் ராகேஷாக. பணப் பிரச்னை இங்கு குறுக்கிடாது.''

''எனக்காக வீட்டைவிட்டு வந்துவிடப் போகிறீர்களா?''

''அது வீடு இல்லை, நரகம். நிம்மதியாக இருக்க வேண்டும் என்ற சொந்த நலனுக்காகத்தான் உன்னை நான் நாடுகிறேன்.''

''மிஸ்டர் கபூர் என்னிடம் என்ன சொன்னார் தெரியுமா ?''

''என்ன ?''

'' 'ஓர் ஆணும் பெண்ணும் திருமணம் செய்து கொள்ளுவதற்கு முன்னால் இதை முக்கியமாகக் கவனிக்க வேண்டும்.... அவர்களுக்குள் பொருளாதார ஏற்றத்தாழ்வு இருக்கக் கூடாது. பாரம்பரியமாக வருகிற வெவ்வேறு தரத்துச் சமூகப் பிரக்ஞை உள்ளவர்களாக இருந்துவிட்டால், திருமண வாழ்க்கை நரகமாவதற்கு வேறு காரணமே வேண்டாம்....' அவர் இப்படிச் சொன்னதில் உண்மை இருப்பதாகத்தான் எனக்குப்படுகிறது.''

'' அவர் மனைவியைக் கண்டு அவர் பயப்படுகிறார்.... இதை எதிர்நோக்கத் துணிவில்லாமல், அவர் ஏதோ சாமர்த்தியமாகச் சொல்லிச் சமாளிக்கப் பார்க்கிறார்.... அவர் சொன்னதை வேதவாக்காக எடுத்துக் கொள்ளும் அளவுக்கு உன்னை நான் முட்டாள் என்று நினைக்கவில்லை......''

''என்றால் உங்கள் குடும்ப வாழ்க்கை நரகமாக வேண்டுமா ?''

''இது ஓர் அசட்டுத்தனமான தியாக உணர்ச்சி.....''

''இது அசட்டுத்தனமோ என்னவோ.... என்றால் மிஸ்டர் கபூருக்குத் தொல்லை ஏற்படுவதை நான் விரும்பவில்லை.''

''என்ன தொல்லை ?''

''மிஸஸ் கபூரினால்.....''

ராகேஷின் முகம் சிவந்தது. ''பெண்டாட்டியைச் சமாளிக்கத் தெரியாதவன் ஆணாய் இருந்து என்ன பிரயோசனம் ? நான் என் தந்தையாக இருந்திருந்தால், என் தாயை என்றோ கொன்றிருப்பேன்.....''

'' உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா ?''

''என் தாயைக் கொன்றுதான் நான் உன்னை அடைய வேண்டும் என்றால் அதற்கும் நான் தயார்......''

விஜயா திடுக்கிட்டாள். எத்தனை நேரமாக மணி கையில் டிபனுடன் அங்கு நின்றுகொண்டிருந்தான் என்று அவளுக்குத் தெரியாது. எதேச்சையாக அவள் திரும்பியபோது, முகத்தில் எந்தவிதமான சலனமுமின்றி அவன் நின்று கொண்டிருந்தான். தாங்கள் பேசியதை அவன் கேட்டுக் கொண்டிருந்திருப்பானோ? அப்படியானால் கபூரிடமும் சொல்வானோ?

''வாங்கிக் கொண்டு வந்துவிட்டீர்களா ?'' என்று ஒரு செயற்கையான புன்னகையுடன் அவள் அவனிடமிருந்து தட்டுக்களை வாங்கி ராகேஷிடம் நீட்டினாள்.

''தாங்க்ஸ்... வேண்டாம்.... இப்பொழுது தான் சாப்பிட்டுவிட்டு வந்தேன்.... ஹல்லோ மிஸ்டர் மணி.... ஹௌ ஆர் யு ?''

''தாங்க்யு.... ஹௌ ஆர்யு.... பரவாயில்லை. வாங்கிக் கொள்ளுங்கள்....நான் இன்னொரு 'செட்' வாங்கிக் கொண்டு வருகிறேன்'' என்றான் மணி.

''ப்ளீஸ்... யு கோ அஹெட்....'' என்றான் ராகேஷ்.

அங்கு சிறிது நேரம் பொருள் பொதிந்த அமைதி நிலவியது.

''மிஸ் விஜயா கொஞ்ச நாட்கள் என் இடத்தில் வேலை செய்யப் போகிறார்கள்.... நான் லீவில் போகிறேன்.....'' என்றான் மணி.

ராகேஷ் விஜயாவைப் பார்த்தான். அவன் பார்ப்பதை உணர்ந்தும், அவனைப் பார்க்காமலேயே அவள், 'ரஸமலாய்' சாப்பிட்டுக் கொண்டிருந்தாள்.

''மிஸ்டர் கபூர் நான் இல்லை என்பதை நிச்சயம் உணரமாட்டார். அவ்வளவு அழகாக மிஸ் விஜயா 'டைப்' செய்கிறார்கள்'' என்றான் மணி.

'' நீங்கள் சொன்னது வாஸ்தவம்தான். இவ்வளவு ருசியான 'ரஸமலாய்' நான் சாப்பிட்டதே கிடையாது'' என்றாள் விஜயா.

''சின்னக் கடையாக இருந்தாலும் இங்குதான் வாய்க்கு ருசியான தின்பண்டங்கள் கிடைக்கும். பெரிய கடைகள் எல்லாம் 'ஹம்பக்'. வெளிச்சந்தான் மிச்சம்'' என்றான் மணி.

'' நான் சின்னக் கடை என்பதற்காகச் சொல்ல வில்லை. நான் உண்மையாகவே சாப்பிட்டுவிட்டுத்தான் வருகிறேன். எனக்குப் பசியில்லை '' என்றான் ராகேஷ்.

''சே... சே... நான் அதற்காகச் சொல்லவில்லை....'' என்று குரலில் கலவரம் தோன்ற அதை மறுத்தான் மணி.

'' நீங்கள் எதற்கு வேண்டுமானாலும் சொல்லுங்கள். நான் அதைப் பற்றிக் கவலைப் படவில்லை'' என்றான் ராகேஷ்.

''இப்பொழுது யாருக்குக் 'காம்ப்ளெக்ஸ்' என்று எனக்குப் புரியவில்லை'' என்றாள் விஜயா.

'' யாருக்கும் இல்லை..... நீ என்னுடன் வரப் போகிறாயா, இல்லையா ?''

'' எங்கே ?''

''போகும்போது தீர்மானிப்போம்.''

'' அப்படி என்றால் வர முடியாது.''

'' ஏன் ?''

விஜயா பேசாமல் இருந்தாள்.

'' என் அம்மாவைக் கண்டுதானே உனக்குப் பயம்?'' என்று ராகேஷ் கேட்டு அவளைத் தீர்க்கமாகப் பார்த்தான். (தொடரும்)



# BHEL
# அறிவிக்கும்
# அமோக வெற்றி:

BHEL நிறுவனத்தின் சீரிய பணிக்குச் சிகரமாய் அமைந்துள்ளன 1974-75ம் ஆண்டில் அது பெற்ற அமோக வெற்றிகள். நாட்டின் சக்தி உற்பத்தித் திறனுக்கு 1356MW அளித்த வெற்றி, 3000MW அளிக்க வல்ல டர்போசெட்டுகள் உற்பத்தி செய்த வெற்றி. ரூ. 310 கோடி மதிப்புள்ள மொத்த உற்பத்தி மூலம், இலாபம் மட்டும் (வரிகளுக்கு முன்) ரூ. 48 கோடி பெற்ற வெற்றி.



1974-75ல் நாட்டின் மின் உற்பத்தி 1720MW மேலும் அதிகரித்துள்ளது. கடந்த 1973-74ல் அதிகரித்த 466MW உடன் ஒப்பிடும்போது இது நாலு மடங்கு அதிகமாகும். இதில் BHEL-ன் பங்கு 80 சதவிகிதமாகும். இந்தச் சிறப்பைப் பெறுவதில் மின்துறை அமைச்சகமும் கனரகத் தொழில் துறையும் பெரும் ஒத்துழைப்பை அளித்துள்ளன.

## BHEL-மும்மடங்கு பெருகியுள்ள மதிப்பு

1971-72ல் இருந்ததை விட இப்போது BHEL எல்லாவகையிலும் மும்மடங்கு பெருகியுள்ளது. அதன் மொத்த உற்பத்தி ரூ. 103 கோடியிலிருந்து ரூ. 300 கோடியாக ஆகியுள்ளது. முன்பு அதன் லாபம் வரிக்கு முன் ரூ. 2 கோடிக்கும் குறைவாக இருந்தது. இப்போது ரூ. 48 கோடி. ஒவ்வொரு ஊழியரும் ஆண்டொன்றுக்குச் செய்து முடித்திடும் மொத்த தலா உற்பத்தி ரூ.29,000-லிருந்து ரூ. 67,000 ஆகியுள்ளது.

1971 வரை ஆண்டுதோறும் சராசரி 5 அல்லது 6 ஜெனரேட்டிங் யூனிட்டுகள் தயாரிக்கப்பட்டன. 1974-79-ல் BHEL தயாரித்து முடித்துள்ளது 30 ஜெனரேடிங் யூனிட்டுகளாகும். இப்போது பல புதிய தயாரிப்புகளும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. 210MW பாய்லர்கள் மற்றும் டர்போ செட்டுகள்; 235MW நியூக்ளியர் டர்பைன்கள்; அதிகவேக தொழில் துறை டர்பைன்கள்; சென்ட்ரிஃபூகல் கம்பரஸ்ஸர்கள்; 420 KV சர்க்யூட் பிரேக்கர்கள்; 400 KV டிரான்ஸ் பார்மர்கள்; ரிக்கவரி பாய்லர்கள்; எலெக்ட்ரானிக் உபகரணங்கள்; மற்றும் பல.

BHEL பல புதிய விசேஷ பிரிவுகளையும் அமைத்துள்ளது. சிறந்த ஆலோசனைகளை அளிக்கவும், அவசரத் திட்டங்களை மேற்கொள்ளவும், மிக நவீன கருவிகளைப் பராமரிக்கவும் இந்தப்பிரிவுகள் அமைக்கப்பட்டுள்ளன. ஹைதராபாத்திலும் இதர BHEL தொழிலகங்களிலும் அமைக்கப்பட்டுள்ள R & D செல்களும் ஆய்வுக்கூடங்களும் தவறுகளைக் கண்டுபிடித்துச் சரிசெய்வதிலும், தயாரிப்பு டிசைன்களை எளிமைப்படுத்துவதிலும், புதிய தொழில் நுட்பங்களைத் தெரிந்து கொள்வதிலும் ஈடுபட்டுள்ளன. நீண்டகால நடவடிக்கையாக, எனர்ஜி சிஸ்டம்ஸ் அண்ட் நியூ ப்ராடக்ஸ் டிவிஷன் மேற்கொண்டுள்ள பணி காற்றின் சக்தி, சூரிய ஆற்றல் இவற்றிலிருந்து சக்தி பெற புதிய வழிவகைகளைக் காண்பது. வருங்காலம் குறித்து மிகுந்த நம்பிக்கை அளிக்கும் வகையில் ஒரு ஒருங்கிணைந்த என்ஜினீரிங் தொழில் தொகுதியாக இப்போது உருவாகியுள்ளது.

## ஒளிமயமான எதிர்காலம்:

நாட்டில் நிறுவப்பட்ட மின்திறன் இப்போது சுமார் 20,000 MW ஆக உள்ளது. ஐந்தாவது திட்டத்தில், 1979-ல் இது 35,500 MW ஆக அதிகரிக்கும். ஆறுவது திட்டத்தில் இது மேலும் 22,000 MW அதிகரிக்க வேண்டும். ஆக அடுத்த பத்தாண்டுகளில் சுமார் 38,000 MW அதிகரிக்க வேண்டும். இது இப்போது உள்ள சக்தியைப் போல் மும்மடங்கு ஆகும். இவை தவிர, சூப்பர் தெர்மல் பவர் ஸ்டேஷன்கள், நேஷனல் பவர் கிரிட் இவற்றின் மூலம் மின்துறை அமைச்சகமும் திட்டக்கமிஷனும் மேலும் அதிக பலன்களை அடையத் திட்டமிட்டுள்ளன. இந்தப் பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள BHEL தயாராக உள்ளது.

ஆமாம். இந்தியாவின் எதிர்காலம் ஒளிமயமானது என்று BHEL முன்னறிவிப்பு செய்கிறது...BHELமூன்றாண்டுகளில் தன் திறனை மும்மடங்கு பெருக்கியுள்ள என்ஜினீயரிங் தொழில் தொகுதி...1984-ல் இந்தியாவின் மின்சக்தியை மும்மடங்காக்க உதவ இப்போது தயாராக உள்ளது.

# கட்சி மாறும் பட்சி

கதை :
குட்டி கிருஷ்ணன்

படம் :

8

கேடி சொக்கப்பனுக்குப் பணம் கொடுத்து அனுப்பினான் பட்சி. அந்த சமயம் கீதா வந்தாள்.

எல்லாத்தையும் மறைஞ்சு இருந்து கேட்டேன்.

ரொம்ப சூடா இருக்கே. வா, பீச்சுக்குப் போய்க் காற்று வாங்கிக் கிட்டே ஐஸ்கிரீம் சாப்பிடலாம்.

சிறிது நேரத்துக்குப் பின் :
















லஞ்சம் வாங்கறது தான் உங்க நாணய வாழ்க்கையா?
லஞ்சமா? சேச்சே! உறவுக்குக் கை கொடுத்து உரிமைக்குக் குரல் கொடுக்கிறேன் அவ்வளவு தான்.

விளக்கம் தேவை.
என்னைத் தேடி வரவங்களுடைய உறவுக்குக் கை கொடுக்கிறேன். ஷேக் ஹாண்ட்! அப்ப சில நோட்டுக்கள் கை மாறுது அவ்வளவு தான்.....

....அப்புறம் அவங்க தங்கள் உரிமைன்னு நினைக்கிற விஷயத்துக்குக் காயத் தக்க இடத்துக்குப் போய்க் குரல் கொடுக்கிறேன். சில சமயம் பலன் கிட்டுது; பல சமயம் கையை விரிக்கும்படியும் ஆகிறது. இதைப் போய்ப் பெரிசு பண்ணிக்கிட்டிருக்கியே!

வேடிக்கை வேணும். என் காதலா, ஊழல் அரசியலா? எது வேணும் உங்களுக்கு?
என்ன கீதா இது? மாநிலம் வேணுமா? சுயாட்சி வேணுமா? இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுங்கற மாதிரி பேசறே!

உம், புரிஞ்சுக்கிட்டேன். இந்தக் கீதா போனால் வேறு பல கீதாக்கள். ஆனால் பணம் பண்ணுகிற இந்த வாய்ப்பை இழந்தால் வேறு சந்தர்ப்பம் கிடைக்குமா? நான் வருகிறேன்.

கீதா தனிமையில் நடந்த போது...
இவரை எப்படியாவது திருத்தியாகணுமே... அதற்கு வழி?... ஆ! அது தான் சரி!

# அம்மாவின் ஆசை

பிரபல அட்வொகேட் ரங்கநாதத்தின் ஒரே மகள் வைதேகிக்கு இன்னும் நான்கு நாட்களில் கல்யாணத்துக்கு முகூர்த்தம் வைத்தாகிவிட்டது. நெருங்கிய பந்துக்களுக்கு அழைப்பும் அனுப்பியாகிவிட்டது.

''வைதேகி! வைதேகி!'' என்று பெண்ணை அழைத்தவாறு தன் பருத்த தேகத்தைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு மாடி அறையை அடைந்த தாயார் ருக்மிணி அம்மாளுக்குப் பெண்ணைப் பார்த்ததும் எரிச்சல் மண்டிக் கொண்டு வந்தது. ஷாம்பூ போட்டுத் தேய்த்துக் குளித்த தலையை ரிப்பனால் முடித்து கொண்டு சலவை செய்த வெள்ளைச் சேலையை உடுத்திக் கொண்டு, மும்முரமாகத் துப்பறியும் நவீனம் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்த வைதேகியைப் பார்த்தால், இன்னும் நான்கு நாட்களில் கல்யாணப் பெண்ணாக மணையில் உட்கார இருக்கிறவள் என்று யாரும் நம்ப மாட்டார்கள்.

''மருதாணி அரைச்சிண்டு வந்திருக்கேன். கையை நீட்டு.'' பெண்ணின் பதிலைக்கூட எதிர்நோக்காமல், மருதாணி இடுவதற்கு வாகாகப் பெண்ணின் எதிரில் ஒரு மோடாவை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தாள் ருக்மிணி அம்மாள்.

''மருதாணியா, ஐயோ ! இந்தப் பைத்தியக்காரத்தனம் எல்லாம் எனக்குப் பிடிக்காது என்று எவ்வளவு தரம் சொல்றது அம்மா!'' சலித்துக் கொண்டாள் வைதேகி.

''எதுடி, பைத்தியக்காரத்தனம்? கல்யாணப் பெண் மருதாணி இட்டுக் கொள்வதா? நாங்களெல்லாம் அந்தக் காலத்திலேயே.....'' என்று ருக்மிணி அம்மாள் முடிப்பதற்குள், வைதேகி சீறினாள். ''அந்தக் காலத்திலே நேரத்துக்கு மதிப்புக் கிடையாது. இந்தக் காலத்திலே அப்படி இல்லே, பணத்தைவிட நேரத்துக்குத்தான் இப்பொழுது 'வால்யூ' அதிகம். எனவே இந்த மாதிரி பைத்தியக்காரத்தனமான சம்பிரதாயங்களுக்காக என் நேரத்தை வீணாக்க முடியாது, அம்மா!'' வைதேகி தடதட என்று மாடியிறங்கி விட்டாள். பின்னாலேயே மெதுவாகப் படியிறங்கி வந்த ருக்மிணிக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது.

''பட்டுப் புடவையா, அதெல்லாம் தண்டச் செலவு அம்மா! வேணுமானால் இன்னும் இரண்டு ஷிபான் புடவை எடுத்துக் கொடு'' என்பாள் வைதேகி. அது மட்டுமா? ''கல்யாணத்தில் மாப்பிள்ளை அழைப்பு, மேளம், காசி யாத்திரை, நலங்கு இவை எதுவுமே கூடாது'' என்பது வைதேகியின் நிபந்தனை. ''அந்தக் காலத்தில் மனிதர்களுக்கு நேரத்தைச் செலவழிக்கத் தெரியவில்லை. அதனால் மாப்பிள்ளை அழைப்பு அது இது என்று ஒரு கல்யாணத்துக்கு நாலு நாட்களை வீணடித்தார்கள். ஆனால் உலகம் எவ்வளவோ முன்னேறியிருக்கும் இந்த ராக்கெட் யுகத்தில் பைத்தியக்காரத்தனமான சம்பிரதாயங்களுக்காக நேரத்தையும் பணத்தையும் வீணடிக்கக் கூடாது'' என்பது அவள் வாதம். எப்பொழுதுமே தன் செல்லப் பெண்ணின் பேச்சுக்கு மறு பேச்சுப் பேசியறியாத ரங்கநாதன் இப்பொழுதும் பெண் சொன்னதுக்கெல்லாம், 'ஆமாம்' போட்டதுடன், 'பெண்ணின் விருப்பத்துக்கு விரோதமாக எதையும் செய்யக் கூடாது' என்று மனைவிக்கும் கட்டளை இட்டு விட்டார். வைதேகியை மணக்க இருக்கும் சுரேஷ் வைதேகியின் முறைப் பையன் – தன் வருங்கால மனைவியின் அபூர்வமான அழகின் முன்னாலும், சென்னை சர்வகலாசாலையில் பி. ஏ.விலும் எம். ஏ.விலும் தங்கப்பதக்கம் வாங்கித் தேறிய புத்தி கூர்மையின் முன்னாலும் பேச்சிழந்து போயிருந்தான். இந்த மட்டும் அவள் தன்னை மணக்கச் சம்மதித்ததே அவனுக்குப் பேரானந்தம்.

ருக்மிணி அம்மாளுக்குத்தான் மகா எரிச்சல். மனத்தோடு புலம்பிய வண்ணம், தோட்டத்திலிருந்து பறித்தெடுத்த குண்டு மல்லி அரும்புகளை அழகாகத் தொடுக்கலானாள் அந்த அம்மாள்.

வைதேகிக்குச் சின்ன வயதில் பூ என்றால் கொள்ளை ஆசை. அம்மா தன் தலையை வாரிக் கொண்டையிட்டுப் பூச்சூடிக் கொள்ளும்போதெல்லாம் தானும்போட்டிபோட்டுக்கொண்டு தலை நிறையப் பூச்சூடிக் கொள்வாள்.

''எனக்கும் உன்னை மாதிரி புடவை கட்டி விடும்மா !'' என்று அம்மாவை நச்சரிப்பாள். அப்பொழுதெல்லாம் ''ஆகட்டும், நீ பெரியவளாக வளர்ந்தப்புறம் உனக்கும் விதம் விதமாகப் புடவை வாங்கித் தருவேனாம், என்ன?'' என்பாள் ருக்மிணி. அவள் மனக்கண் முன், வைதேகி பெரியவளாகி அவள் திருமணக் கோலத்தில் நிற்கும் காட்சி விரிந்து மலரும். ருக்மிணி நடுத்தரக் குடும்பத்தில் பிறந்து ஏழைமையில் வளர்ந்து, ரங்கநாதத்தைக் கைப் பிடித்தவள். ருக்மிணியின் கல்யாணம் ஒரு கோயிலில் வெகு எளிமையாக நடந்தது. விதம் விதமான நகைகள் இல்லே,



**'உமன்ஸ் லிப் !'**

சர்வதேச மாதர் ஆண்டில் டெல்லிப் பெண்கள் ஒரு சாதனை நிகழ்த்தியிருக்கிறார்கள். சில நாட்களாக பிக்பாக்கெட், குழந்தைகளின் நகைகளைத் திருடுதல் போன்ற குற்றங்களில் ஆண்களைப் போலவே சம அளவில் பெண்களும் ஈடுபட்டுப் பிடிபட்டும் இருக்கிறார்கள். - டைம்ஸ் ஆப் இந்தியா - பாபு

பட்டும், பஹுரஸும் இல்லை, நிறைந்த உற்றார் உறவினர் இல்லை. இந்த இல்லாமையும், எளிமையான திருமணமும் ருக்மிணிக்கு ரொம்பக் குறையாக இருந்தாலும், அதைப் பற்றி அதிகம் நினைக்கவில்லை. பின்னால், அவள் கரம் பிடித்த வேளையோ, வைதேகி பிறந்த வேளையோ, வாழ்க்கைப் பந்தயத்தில் பின்னால் நின்று கொண்டிருந்த ரங்கநாதன்' மடமட வென்று வெற்றிக் கம்பை நாட்டினார். செல்வம் சேர்ந்தது. இப்பொழுது ருக்மிணிக்குத் தான் தன் இளமையில் அனுபவிக்க ஆசைப்பட்டு, கைகூடாதவற்றை யெல்லாம் தன் பெண் அடைய வேண்டும் என்ற ஆசை. தன் பெண்ணின் கல்யாணத்தை விமரிசையாக நடத்த வேண்டும் என்ற விருப்பம். ஆனால் பெண்ணோ மாப்பிள்ளை அழைப்புக் கூட கூடாது என்கிறாளே?



இன்னும் சற்று நேரத்துக்கு இதே சிந்தனையில் உட்கார்ந்திருந்தால் ருக்மிணி அம்மாள் அழுதேவிட்டிருப்பாள். ஆனால் அதற்குள், தான் கைப் பிடிக்க இருக்கும் சுரேஷின் கரத்தைப் பிடித்தவாறு அம்மாவின் எதிரே வந்து நின்றாள் வைதேகி. ''அம்மா! நானும், சுரேஷும் சினிமாவுக்குப் போகிறோம். உட்லண்ட்ஸில் சாப்பிட்டுவிட்டுத் தான் வருவோம். நீ எனக்காகக் காத்திருக்காதேம்மா''! என்று கொஞ்சலாகக் குழைந்தாள் பெண்.

ருக்மிணி அம்மாளுக்குத் தன் பெண்ணும் மருமகனும் கல்யாணத்துக்கு முன்னாலேயே கரம் பிடித்துக் கொண்டு நிற்பதைப் பார்க்க ஒரு பக்கம் லஜ்ஜையாகவும் இருந்தது. மறு பக்கம் சந்தோஷமாகவும் இருந்தது.

''அதெல்லாம் சரி. பட்டுப் புடவை தான் கட்டமாட்டேன் என்கிறாய். கல்யாணப் பெண்ணாய், லட்சணமாய்த் தலை நிறையப் பூவாவது வைச்சுக்கோடி!'' ருக்மிணியின் கரம் தான் ஆசையுடன் தொடுத்த மல்லிச் சரத்தைப் பெண்ணின் தலையில் சூட்ட நீண்டது. அதற்குள் பெண் பத்தடி நகர்ந்து விட்டாள். ''போ, அம்மா. நான் என்றைக்கு வண்டி வண்டியாய்த் தலையில் பூ வைத்துக் கொண்டு இருக்கிறேனாம். என் ஃப்ரெண்டுகள் யாராவது பார்த்தால் சிரிப்பார்கள். அதுவும் இல்லாமல் எனக்கு மல்லிகைப் பூ வாசனையே ஒத்துக்கறதில்லை.... அப்போ நான்வரேன்!'' குதிநடைவிட்டுச் சென்ற பெண்ணைப் பார்த்த வண்ணம் கண் கலங்க நின்றாள் ருக்மிணி.



ரொம்ப "பிஸி!"

"அது யார் லதா, கேட்டு வாசலில் நின்றபடியே உன்னோடு அரை மணி நேரமாகப் பேசிட்டுப் போனது?"

"என் சிநேகிதி புவனாதான். உள்ளே வந்து பேசிட்டுப் போக ஒரு நிமிஷம்கூட நேரமில்லாததால் பாவம், கேட் வாசலிலே நின்னே பேசிட்டுப் போய் விட்டாள்."

சரஸ்வதி பஞ்சு

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

கல்யாணம், வைதேகியின் விருப்பப்படி சம்பிரதாயங்கள் இல்லாமல், எளிமையாக முடிந்துவிட்டது. ருக்மிணி அம்மாளுக்கு அழ மாட்டாத துக்கம்தான். இருந்தாலும் இந்த மட்டும் பெண் முகூர்த்த நேரத்தில் மடிசார் உடுத்திக் கொண்டு, தாலி கட்டிக் கொள்ளச் சம்மதித்தாளே என்று சந்தோஷம். கல்யாண மான மறு தினமே ஹைதராபாத்துக்குக் கிளம்பிவிட்டார்கள் மணமக்கள். அங்கு தான் சுரேஷுக்கு உத்தியோகம்.

ஹோட்டல் 'ஸரோவரில்' டிபனுக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு, அமர்ந்திருந்தனர் சுரேஷும் வைதேகியும். வைதேகியின் அழகுக்கு இயற்கை இன்னமும் மெருகூட்டி யிருந்தது. இன்னும் நான்கு மாதங்களில், இயற்கை பெண்களுக்குத் தரும் பெரும் பொறுப்பைத் தான் ஏற்க இருக்கும் பெருமிதம், வைதேகி யின் கண்களில், பேச்சில், சிரிப்பில் அலையும் மீறிக் கொண்டு மிளிர்ந்தது. அவள் பார்வை அங்கு குறுக்கும் நெடுக்குமாய் ஓடிக் கொண்டிருந்த குழந்தைகளில் குறிப்பாக ஒரு பெண் குழந்தையின் மீது பதிந்து நின்றதை சுரேஷ் கவனிக்கத் தவறவில்லை. அவன் பார்வையை உணர்ந்து திரும்பினாள் வைதேகி.

"அந்தக் குழந்தை அழகாக இல்லே?" என்று கேட்ட வைதேகியின் குரலில் பாராட் டுடன் கூட, எதையோ எதிர்நோக்கும் ஆனந்தம்.

"எனக்கென்னவோ அந்தப் பையன்தான் ஸ்மார்ட்டாக இருப்பதாகத் தோன்று கிறது." — சுரேஷின் குரலில் 'உன்னைப் புரிந்து கொண்டேன்' என்ற விளக்கம்.

"எனக்குப் பெண்தான் வேண்டும்." சுற்றி வளைக்காமல் நேரடியாகத் தன் ஆசையை வெளியிட்டாள் வைதேகி.

"ஏனாம், பிள்ளை என்றால் கசக்கிறதோ?" — சுரேஷ்.

"அப்படி இல்லே, சுரேஷ். ஆண் குழந்தையைப் போல அல்லாமல், பெண் குழந்தைக்கு விதம் விதமாக உடை அணிவித்து அழகு செய்யலாம். அது மட்டுமா?" வைதேகி யின் குரல் சன்னமாக ஒலித்தது. "என் பெண்ணுக்குப் பாட்டும் நாட்டியமும் சிறு வயதிலிருந்தே முறையாகப் பெரிய நட்டுவ னாரை வைத்துக் கற்றுத் தருவேன். பிறகு அவளை 'கலாக்ஷேத்திர'த்தில் சேர்த்து நாட்டி யத்தில் பெரும் பயிற்சி கொடுத்து, பெரிய நடனமணியாக ஆக்க வேண்டும் என்று எனக்கு ரொம்ப ஆசை சுரேஷ்!" வைதேகிக்கு உணர்ச்சிப் பெருக்கில் கண் கலங்கி இருந்தது.

"அதெல்லாம் சரிதான். நீ விரும்புகிற படியெல்லாம் நடந்துவிடுமா என்ன? ஒரு பத்து, பதினைந்து வயது வரை நீ சொல்லு கிறபடியெல்லாம் உன் பெண் நடக்கலாம். அதற்குப்பின், விவரம் தெரிந்தவுடன் உன் சொற்படி நடக்க மறுத்தாலோ, அவள் வாழ் வைப் பொறுத்த வரையில் வேறு லட்சியங்கள் இருந்தாலோ? உன் பெண்ணுக்கு நடனம் கற்றுக் கொள்ளப் பிடிக்கவில்லை என்றே வைத்துக் கொள்...." சுரேஷ் முடிக்கவில்லை.

"அது எப்படி, நான் பெற்ற பெண், நான் என் ஆசைகளைக் கொட்டி வளர்க்கும் பெண், என் எதிர்காலக் கனவுகளின் மையமாக விளங்குபவள்...." உணர்ச்சிவசப் பட்டுப் பேசிக் கொண்டே போன வைதேகி, சுரேஷின் முகத்தை, சிரிக்காமல் சிரிக்கும் அவன் கண் களைச் சந்தித்த உடன் மேலே பேச முடியாமல் தடுமாறினாள்.

'ஏனடியம்மா, நீ உன் அம்மாவின் அற்ப ஆசைகளைக்கூட உதாசீனப்படுத்தியவள், உன் தலையில் பூச்சூட்ட விரையும் கரத்தைத் தடுத்து நிறுத்தியவள், வாழ்வில் ஒரு முறை வரும் கல்யாண நாளில்கூட அவள் அபி லாஷைகள் பைத்தியக்காரத்தனம் என்று ஒதுக்கியவள், உனக்கு மட்டும், உனக்குப் பிறக்க இருக்கும் குழந்தை மீது இத்தனை பாத்தியதையா? ஆசைப்படவும், கனவு காணவும் உனக்குத்தான் தெரியுமோ?' — சுரேஷ் இப்படியெல்லாம்சொல்லவில்லைதான்; ஆனால் அவன் கண்களும், சிரிப்பும் அதைத் தான் சொல்கின்றன என்பதைப் புரிந்து கொண்டாள் வைதேகி.

சென்னையில் ரங்கநாதன் தம்பதியருக்கு அப்படி ஒரு சந்தோஷமான அதிர்ச்சி. லேடி டாக்டர் குறித்துக் கொடுத்திருக்கும் பிரசவ நேரத்துக்குச் சரியாகப் பத்து நாட்கள் முன்பு தான் சென்னை வரப் போவதாகவும், வளை காப்பு, சீமந்தம் போன்ற, 'பைத்தியக்காரத் தனங்களுக்கு' ஏற்பாடு செய்ய வேண்டாம் என்றும், ஒவ்வொரு கடிதத்திலும் எழுதிய பெண், ஆறும் மாதத்திலேயே பிறந்தகம் வந்தது மட்டுமின்றி, "வளைகாப்புக்கு எப் போது அம்மா நாள் குறித்திருக்கிறாய்?" என்று அல்லவா கேட்கிறாள்?

ருக்மிணி அம்மாளுக்குச் சந்தோஷத்துடன் கூட, பெண் எங்கே க்ஷணச்சித்தம், க்ஷணப் பித்தமாகக் குணம் மாறிவிடுவாளோ என்ற பயமும் பிடிக்க, சாதுவாய்த் தன் முன் அமர்ந்து, தலையில் ராக்கொடி வைத்து, மல்லிகைப்பூ தைத்துப் பின்ன அனுமதித்திருக் கும் பெண்ணின் முகத்தைத் திருப்பினாள். திருஷ்டி கழித்தவாறே, "ஏன்டி, மாப் பிள்ளை உனக்கு என்ன மந்திரம்டி போட்டார், ஆளே மாறிவிட்டாயே!" என்றாள் தாயார். பதில் பேசாமல் புன்னகை செய்தாள் வைதேகி. அவள் மனக் கண் முன், அழ கான பெண் ஒருத்தி காலில் சலங்கை கொஞ்ச, அற்புதமாய் நடனம் ஆடிக் கொண் டிருந்தாள்!



# பிரேம் கஹானி

திரையுலகத்துக்கு 'இரு நண்பர்கள், ஒரு காதலி'க் கதை புதிதல்ல. அந்த முறையில் பார்த்தால் இந்தக் 'காதல் கதை'யும் புதிதல்ல. ஆனால் சிறிது சுவடு மாறிச் சென்றிருக்கிறது.

ராஜேஷ் கவிஞன்; சுதந்திரப் போர் நிகழ்ந்த காலத்தில் காதல் கவிதை பாடி மகிழ்ந்தவன்; காமினி என்னும் காதலியைத் தேடியும் மகிழ்ந்தவன்.

அவன் அண்ணன் சுதந்திரப் போராட்டத்தில் இறங்கி உயிர் துறக்கவே, பிரிட்டிஷாரை வேரறுக்கப் புரட்சியில் இறங்கியவன். போலீசார் தேட, அத் தேட்டத்தில் அவன் காயம்பட, காயம் பட்டவனை ஷேர்கான் என்னும் பட்டாணியன் லாரியில் ஏற்றி, ராஜேஷின் நண்பன் நிரஜின் வீட்டுக்கு அனுப்புகிறான்.

நிரஜ் போலீஸ் அதிகாரி. அவன் மனைவியாகக் காமினியைக் காணும் பொழுது கதை 'செண்டிமெண்ட்' 'ஆண்டி செண்டிமெண்ட்' ஆகியவற்றுக்கெல்லாம் உட்பட்டு ஆட்டம் போடுகிறது. என்றாலும் ஆட்டம் காணவில்லை.

காரணம் ராஹி மாஸூம் ரெஜாவின் அழுத்தமான வசனங்கள். 'ஷேர்' என்னும் உருதுக் கவிதை முறை வேறு அவற்றுக்குக் கை கொடுத்திருக்கிறது. ஆனந்த பக்ஷியின் கருத்துள்ள பாடல்களுக்கு லக்ஷ்மிகாந்த் பியாரேலாலின் இசை அமைப்பு உறுதுணையாக நிற்கிறது.

கதாநாயகியாக வரும் மும்தாஜ் நடிப்பில் சிறந்து நிற்கிறார். அடுத்தபடி பட்டாணாக வரும் விநோத் கன்னா பெருமை தேடிக் கொள்ளுகிறார். கதாநாயகனாக வரும் ராஜேஷ் கன்னா 'வந்தோம், போனோம்' என்று பெயர் பண்ணிக் கொள்ளுகிறார். அவருக்கு நண்பராக வரும் சசிகபூர் நடிப்பில் ராஜேஷ் கன்னாவுக்கு நட்புக்கரம் நீட்டுகிறார்!

அதிக விரசம் இன்றிக் கொண்டு போனால், எங்கே படம் 'அம்பேல்' ஆகிவிடுமோ என்று அஞ்சி இயக்குநர் ராஜ்கோஸ்லா மழைக் காட்சி ஒன்றைச் சிருஷ்டித்து மனைவியை நண்பனுடன் உலாவ அனுப்பி வைக்கும் நிகழ்ச்சியை நீட்டியிருக்கிறார். இப்படி 'அறுக்காமல்' இருந்திருந்தால், படம் அதிகமாக நாடகமாகியிராது.

—ரா. வி.

---



## 'சோ' தரும் சோகக் கதை!

"அண்மையில் நடிகர் திரு "சோ" அவர்களைச் சந்தித்தேன். அவர் கூறினார்:

தற்சமயம் நான் இருபது தமிழ்ப் படங்களில் நடித்து வருகிறேன். ஆனால் நான் இப்போது மெல்லமெல்லப் படங்களில் நடிப்பதைக் குறைத்து வருகிறேன். சென்ற ஆண்டுமட்டும் சுமார் பன்னிரண்டு படங்களில் நடிக்க மறுத்திருக்கிறேன்! காரணம், படிப்பதிலும், பத்திரிகை விஷயத்திலும் தீவிரமாக ஈடுபடத்தான்.

நம்பினால் நம்புங்கள். நான் சினிமா பார்த்து மூன்று ஆண்டுகள் ஆச்சு சார்! தமிழ்ப் படம் என்று இல்லை. எந்தப் படமும் கடந்த மூன்று ஆண்டுகளாக நான் பார்க்கவில்லை. என் கருத்துக்களை நீங்கள் அப்படியே திரைப்படத்தில் காண வேண்டும் என்றால் ஏதாவது ஏமாந்த தயாரிப்பாளர் கிடைத்தால்தான் உண்டு!

ஒரு நாணயத்துக்கு இரண்டு பக்கங்கள் இருப்பது போல சினிமா உலகத்திலும் நல்லது - கெட்டது இருக்கத்தான் செய்கிறது. சினிமா உலகத்தில் இருந்து கெட்ட விஷயங்கள் பரவுவது போல் நல்ல விஷயங்கள் வெளியே தெரிவது இல்லையே! இனிமேல் தொடர்ந்து சினிமா உலகத்தில் நடக்கும் நல்ல விஷயங்கள் பற்றிப் பத்திரிகையில் எழுதப் போகிறேன். நான் இதுவரையில் சினிமா உலகத்தில் இருந்துவருவதற்கு ஒரு நன்றிக்கடனாக இதை நினைத்துச் செயல்படப் போகிறேன்.

— வி. எஸ். ராஜகோபால்

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பவினமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நிய செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

எல்லா விதங்களிலும் எம். ஜி. ஆருக்கு ஏற்ற கதை; நல்லவன் வாழ்வான், வாய்மையே வெல்லும் என்பதை வலியுறுத்தும் கதை. ஓரியண்டல் பிக்சர்ஸாரின் இவ் வண்ணப் படத்தில் நல்லவனாக வரும் எம்.ஜி. ஆரை எதிர்க்கும் வில்லனும் எம். ஜி. ஆர். தான். இரட்டை வேஷம் எம். ஜி. ஆருக்குக் கைவந்த கலை — ஆகவே வெளுத்து வாங்கி விட்டார்! எம். ஜி. ஆர். நடிக்கும் படங்களுக்கே உரிய தாய்ப் பாசம், தங்கைப் பாசம் போதும் போதும் என்று சொல்லும் அளவுக்கு இருக்கின்றன. கடைசியாக, எம். ஜி. ஆரின் திறமைக்குச் சவால் விடும் அளவுக்குச் சண்டைக் காட்சிகள் இருக்கின்றன. அப்புறம் என்ன? 'நினைத்ததை முடிப்பவன்' எல்லாக் கட்டங்களிலும் புகுந்து விளையாடி எதிலும் குறை வைக்காமல் வெற்றி பெறுவதில் வியப்பென்ன இருக்கிறது?

இரு எம். ஜி. ஆர்.கள் வந்தால் இரு காதலிகள் வந்துதானே ஆகவேண்டும்? கவர்ச்சிக்கு ஒரு லதாவும், காட்சிக்கு ஒரு மஞ்சுளாவும் படம் முழுவதும் வளைய வந்து ரசிகர்களை மகிழ்விக்கின்றனர். இருவரும் வரும் இடங்களில் ரசிக்கவும், சிரிக்கவும், மகிழவும், நெகிழவும் நம்மால் முடிகிறதே! மஞ்சுளாவும் லதாவும் ''கொள்ளை இட்டவன்'' என்ற பாடலுக்கு அபிநயம் பிடித்து அழகு நடனமும் ஆடுகின்றனர். மஞ்சுளாவின் குளியல் அறைக் கவர்ச்சிக் காட்சியும் இருக்கிறது. படம் பார்த்து மகிழ விரும்பும் ரசிகர்களுக்கு இன்னும் என்ன வேண்டும்!

படம் பார்த்து நெகிழ விரும்பும் ரசிகர்களையும் இப்படம் விட்டு வைக்கவில்லை. சுந்தரத்தின் நொண்டித் தங்கையாக வரும் ஊர்வசி சாரதா தம் நடிப்பாற்றலால் அனைவரையும் நெகிழ வைத்து விடுகிறார். இறுதிவரையில் அவர் நடிப்பு ஒன்றுதான் நம் மனத்தில் நிலைத்து நிற்கிறது.

எப்பொழுதும் வில்லனாகவே வரும் நம்பியார் நல்லவனாக வருவது இந்தப்படத்தில் ஒரு புதுமை!

எம். ஜி. ஆர். நடிக்கும் படங்களில் எப்பொழுதுமே பாடல்கள் 'ஹிட்'டாகி விடுவது வழக்கம். ''பூமழை தூவி வசந்தங்கள் வாழ்த்த' என்ற புலமைப்பித்தனின் பாடலும், ''ஒருவர் மீது ஒருவர் சாய்ந்து'' என்ற வாலியின் பாடலும் செவிக்கினிய மெட்டுக்களில் ஒலிக்கின்றன.

ஈஸ்ட்மென் கலரில் அருமையாக ஒளிப்பதிவு செய்யப்பட்டிருக்கும் இப்படத்தின் டைரக்டர் ப. நீலகண்டன் என்று சொன்னாலே போதும். அவரது திரை அநுபவம் அனைவரும் அறிந்ததுதானே?

'வாத்தியா'ரின் அருமை பெருமைகளை அறுதியிட்டுக் கூறும் இப்படம் ''ஸச்சா ஜூட்டா'' என்ற ஹிந்திப் படத்தின் தமிழாக்கம் என்பதை நினைக்கும்போது இனிப்புக்கு இடையே கசப்புக் கலந்ததைப் போல் இருக்கிறதே! இந்தப் பாணியில் ஒரு தமிழ்க் கதை கிடைக்கவில்லையா? —காந்தன்



# ஆத்மாவில் பலமிருந்தால்...

மன்மதனுக்கும் ரதிக்கும் கடுமையான வாக்குவாதம் நடந்தது.

ஆரண்யத்தில் கடும் தவம் புரிந்து கொண்டிருந்த ஒரு முனிவனை, காமுகனாக மாற்றமுடியுமா என்பதே இருவருக்கும் நடந்த விவாதம்.

''முடியும் !'' என்றாள் ரதி.

''முடியாது'' என்றான் மன்மதன்.

''புலன் உணர்ச்சிகளைக் கல்லாக்கிய பிறகே ஒருவன் முனிவனாகிறான். அதிலே ஈரம் உள்ள வரைதான் அதில் காமக் குழம்பு கொதிக்கிறது. துறப்பு என்பது உடல், உள்ளம் அனைத்தையும் துறப்பதே. அப்படிப் பட்டவன் அந்த முனிவன். அவனைக் காமுகனாக்க உன்னால் முடியுமானால் சிவஞான தத்துவம் செத்துவிட்டதாக அர்த்தம்'' என்றான் மன்மதன்.

'' பஞ்சபாணா! இவ்வளவு பழகியும் என்னை நீ அறியவில்லை. எனது அங்கங்களின் ரஸவாதத்தில் அகிலமே சுருண்டு கிடக்கிறது. காமதேவியின் மைய மண்டபத்தில்தான் விசுவாமித்திரன் மதியிழந்தான்; ராஜ்யங்கள் மூழ்கின. சரித்திரத்தின் பெரும் பகுதியே இதுதான். இதிலே மயங்காத ஒருவன் இன்னும் பிறக்கவில்லை !'' என்றாள் ரதி.




''முடியுமானால் அந்த முனிவனை முயன்று பார்'' என்று அவளுக்கு அனுமதி தந்தான் மாரன்.

ரதி தன்னை அலங்கரித்துக் கொண்டாள். மார்பகங்கள் விம்மி நிற்குமாறு கச்சை கட்டிக் கொண்டாள். ஆடும்போது கால்கள் முழுமையும் தெரியும்படி ஆடை அணிந்து கொண்டாள். ஞான முனிவன் தவம் செய்யும் இடத்தை நோக்கி விரைந்தாள்.

''நமோ நாராயணா! நமோ நாராயணா!''

காட்டு மிருகங்களையே துரத்தி அடிக்கும் அளவுக்கு இந்தக் கோஷம் முனிவனின் வாயிலிருந்து வந்து கொண்டிருந்தது.

ரதி கால் சலங்கைகளால் ஒலி எழுப்பினாள்.

முனிவன் கண் திறக்கவில்லை.

கைவளையோசை பிறந்தது.

முனிவன் அப்படியே இருந்தான்.

இசையும், ஸ்வரங்களும், கதியும் தோற்று விடும்படி அவள் சிரித்தாள்.

முனிவன் கண் திறக்கவில்லை.

ரதி பாடிக் கொண்டே ஆடத் தொடங்கினாள்.

''என் அன்பே! சிறியதொரு கோபுரத்தின் சிங்காரக் கலசங்களைப் பார். இந்தக் கோயிலின் வாசலில் பரமனே பல தடவை மயங்கி விழுந்திருக்கிறான். இதனை நீ ஒரு முறை பார்த்துவிட்டால் மூச்சுத் திணறும்; பேச்சுத் தடுமாறும்; மறு உலகம் பற்றிய சிந்தனை மரத்துப் போகும்; சிருங்கார லயமே சுகம் சுகம் என்று ஓசையிடும். காலங்கள் மறந்து போகும். கவலைகள் பறந்து போகும். வலிமைகளைச் சேகரித்து வைத்திருக்கும் உனது உடலை, இளமையைச் சேகரித்து வைத்திருக்கும் என்னிடம் கொடுத்துப் பார். பிறகு, தவம் உனக்குக் கசந்து போகும்!''

ஆனால் முனிவனிடமிருந்து 'நமோ நாராயணா' என்ற குரலன்றி வேறொன்றும் இல்லை. எனினும் உரத்து நின்ற அந்தக் குரல் தாழ்ந்து கொண்டே வந்தது.

''நமோ நாராயணா ! நமோ நாராயணா!''

ஏழு ஆண்டுகளுக்கு முன்னே மூடிய முனிவனின் கண்கள், மெதுவாகத் திறந்தன. அவை கோவைப் பழம் போல் சிவந்திருந்தன.

ரதியின் மேனியை அவன் உற்றுப் பார்த்தான். பார்த்தான், பார்த்தான், பார்த்துக் கொண்டேயிருந்தான்.

'நமோ நாராயணா' என்ற குரல் கீழ்ஸ்தாயிக்கு வந்துவிட்டது.

ரதி அவன் அருகில் வந்து அமர்ந்தாள்.

அவன் கன்னங்களை வருடினாள். ஆள்காட்டி விரலினால் உதடுகளைத் தடவினாள். மார்பினில் சாய்ந்தாள். அவனை மார்போடு அணைத்தாள்.

''நமோ நாராயணா !''

முனிவன் குரல் மெதுவாக மேலெழுந்தது. ஏதோ ஒரு வகை உணர்ச்சி அவனை உந்தித் தள்ளியது. 'நமோ நாராயணா!'' என்று ஓங்கி உச்சரித்தான்.

கூடைக்குள்ளிருந்து தலை தூக்கும் பாம்பு போல் அவன் மார்பிலிருந்து மெதுவாக விலகினாள் ரதி.

இப்போது அவன் அவளையே உற்றுப் பார்த்தான். அவள் கண்கள் சிவந்தன. அவை மெதுவாக மூடின.

''நமோ நாராயணா!'' — இப்போது அவள் அதை உச்சரிக்கத் தொடங்கினாள்.

கதியும், லயமும் கூடிக்கொண்டேபோயின.

முனிவனைக் காமத்துக்கு அழைக்க வந்த ரதி, தான் ஞானத்துக்குள் நுழைந்துவிட்டாள்.

முனிவன் சிரித்தான்.

மன்மதன் அலறினான்.

''தவத்தைக் கலைக்கப் போன என் அருமை ரதியே, நீயுமா தவம் செய்யத் தொடங்கி விட்டாய் !''

திடீரென ஒரு சிரிப்புச் சத்தம் கேட்டது ; இறைவன் பிரத்தியட்சமானான். அவன் சொன்னான் :

''பலவீனமான ஆத்மாக்கள் மற்றவர்களாலே மாற்றப்படுகின்றன. ஆன்ம பலம் உள்ளவர்கள் மற்றவர்களை மாற்றிவிடுகிறார்கள்.''

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

## கண்களை ஒருபோதும் கசக்க வேண்டாம்...



# கரிக்கும் கண்களுக்குத் தேவை வைஸின்

கரித்தாலும், களைப்படைந்தாலும், கூசினாலும் கண்களைக் கசக்காதீர்கள். சிவந்த கண்களை நிமிட நேரத்தில் இதமுடன் தெளிவாக்கு-வதற்கு வைஸின் இருக்கிறது.
வைஸின் உபயோகியுங்கள்.
கண்கண்ட பலனை உலகெங்கும் உணர்த்தியுள்ளது வைஸின்.
அது வன்மை வாய்ந்தது,
எனினும் மென்மை கனிந்தது.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

**சில்லறை விலை ரூ. 2.97**
(தல வரிகள் தனி.)




### 60 விநாடிப் பரிட்சை

இந்த எளிய வைஸின் பரிட்சையை ஏற்றுப் பாருங்கள். சிவந்த ஒரு கண்ணிலே இரு சொட்டு வைஸின் விட்டுக் கொள்ளுங்கள். ஒரு நிமிடம் கழித்துக் காண்பீர்கள் அத்தாட்சி – ஒரு விழியில் சிவப்பு, மறு விழியில் தெளிவு. (இனி, சிவந்த விழியிலும் வைஸின் இட்டு தெளிவாக்குங்களேன். கண் சிவப்போ, கரிப்போ நீடித்தால், டாக்டரிடம் ஆலோசனை கேளுங்கள்).

# வைஸின்

**களங்கிய கண்களிலே கதிரொளி மீட்பது வைஸின்**

Pfizer ஃபைஸர் தயாரிப்பு "உலக நலனை நாடும் விஞ்ஞானம்"

Pfizer

லிண்டாஸ்-PZ.VI.2a-140 TM

REGISTERED No. M. [illegible]
Registered as a Newspaper in Ceylon

